சிறந்த குருசிஷ்ய வைபவம்

# ஸ்ரீராமானுஜர் - ஸ்ரீகூரத்தாழ்வான் கதை



கூரம் வீரவல்லி சம்பத்குமார்

இலவச பதிப்பு

விற்பனைக்கு அல்ல

# சிறந்த குருசிஷ்ய வைபவம்

## ஸ்ரீராமானுஜர்

## ஸ்ரீகூரத்தாழ்வான் கதை


கூரம் வீரவல்லி
சம்பத்குமார்

A. Block, S.F. No. 3
Vasanth Apartments
162/58, Velacherry Main Road
Chennai - 600 042
Phone : 2244 5024
Cell : 97907 02154
E-Mail / Imessage : samind37@yahoo.com



இலவச பதிப்பு

விற்பனைக்கு அல்ல

# அஞ்சலி

தனது சிறுவயதிலேயே எங்களை விட்டுப் பிரிந்த,
அறிவுச் சுடராய் விளங்கிய
எங்களது அருமைத் தந்தை
**K.V. வீரராகவன்**
மற்றும்
எங்கள் தந்தைக்குப் பிறகு எங்களையும்
எங்கள் உடன்பிறந்த ஐந்து சகோதரிகளையும்
வளர்த்து வாழ்க்கையில் ஒரு சிறந்த
இடத்தில் அமர வைத்து, சமீபத்தில் எங்களை விட்டு பிரிந்த
எங்கள் அருமைத் தாயார்,
**K.V. ராஜலக்ஷ்மி**

**அவர்களது திருப்பாதங்களில் இந்த நூலை சமர்ப்பிக்கிறோம்.**

**– கூரம் வீரவல்லி சம்பத்குமார்**
**– கூரம் வீரவல்லி ரகுநாதன்**

## முன்னுரை

சில வருஷங்களுக்கு முன்பு நான் கூரத்தாழ்வான் கதை என்று ஒரு புத்தகம் எழுதியிருந்தேன். எனது சொந்த ஊர் காஞ்சிபுரம் ஜில்லாவில் உள்ள கூரம் என்ற ஊர். இந்த ஊரில் 1000 வருஷங்களுக்கு முன்பு அவதரித்து ராமானுஜரை குருவாகக் கொண்டு அவருக்கு வலது கரமாக விளங்கி வைஷ்ணவ சித்தாந்தத்தை காக்க தன் கண்களையே இழந்தவர் கூரத்தாழ்வான். எனது ஊர் ஆழ்வானைப் பற்றி அனைவருமே தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. ஆழ்வானைப் பற்றிய பல விஷயங்களையெல்லாம் சேகரித்து திரட்டி ஒரு புத்தகமாக எழுதி அதை இலவச வெளியீடாக வழங்கினேன். அதற்கு நல்ல வரவேற்பு கிடைத்தது.

வைஷ்ணவ இலக்கியங்களிலே பல பொக்கிஷங் களும், முத்து, நவரத்தின மாலைகளும் பல உண்டு. வைஷ்ணவத்தை பற்றி பலருக்கும் தெரிந்து கொள்ள ஆவல் நிறையவே உண்டு. ஆனால் இந்த காலத்து இளைஞர்களுக்கும் குடும்பபாரத்தை தலையில் சுமந்த படி, கடிகாரத்துடன் போட்டிப் போட்டுக் கொண்டு ஓடும் குடும்பஸ்தர்களும், ஓய்வு கிடைக்கும்போது படித்து புரிந்துகொள்ள நேரம் கிடைப்பதில்லை. ஆகவே, இந்த அரிய பொக்கிஷங்களை கடின நடையிலி ருந்து மாறுபட்டு இன்றைய அன்பர்களுக்கு வார, மாத இதழ்களைப் போல எளிய நடையில் எழுத ஆசை உண்டாயிற்று. அந்த முயற்சியில் பிறந்த 2ம் புத்தகம்தான் குருசிஷ்ய வைபவம் ஸ்ரீராமானுஜர் - ஸ்ரீகூரத்தாழ்வான் என்ற இந்த புத்தகம்.

வரும் 2017ம் ஆண்டு சித்திரை மாதம் ஸ்ரீ ராமானுஜ ரின் ஆயிரமாவது வருஷம் வருகிறது. வைஷ்ணவ உலகமே இதை சிறப்பாக கொண்டாட காத்திருக்கிறது. அது சமயம் நாமும் ஸ்ரீராமானுஜரைப் பற்றி அறிந்து கொள்வது அவசியம். இன்றைய சீர்திருத்தங்களை சுமார் 1000 வருஷங்களுக்கு முன்பே செய்து காட்டியவர் ஸ்ரீ ராமானுஜர் என்பது இந்த புத்தகத்தை படித்து பார்க்கும் பொழுது புரியும்.

இந்த புத்தகத்திலுள்ள விஷயங்கள் அனைத்துமே பல வைஷ்ணவ பெரியோர்களின் காலட்க்ஷேபங்களைக் கேட்டதிலிருந்தும், பல ஆஸ்திக அறிஞர்கள் எழுதிய நூல்களிலிருந்தும் நான் திரட்டி எடுத்து தொகுத்து கொடுத்துள்ளேன். மேலும் வலைதளத்தின் (Internet) வாயிலாக பல விஷயங்களை சேகரித்துக் கொடுத்து உள்ளேன். இந்த புத்தகத்தின் சிறப்புகளையும் பெருமைகளையும் அந்த வைஷ்ணவ பெரியாருக்கு அளியுங்கள். ஏதேனும் பிழைகள் இருந்தால் அவற்றை எனக்கு தந்துவிடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இந்த புத்தகம் வெளிவர எனக்கு மிகவும் ஊக்கம் அளித்து உதவிய எனது குமாரன் S. ஸ்ரீனிவாஸ் மற்றும் எனது சகோதரன் K.V. ரகுநாதன் அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியை தெரிவித்து கொள்கிறேன். இந்த புத்தகம் வெளிவர மிகவும் உதவி செய்த திருமதி. ரோகினி ஜெகந்நாதன் மற்றும் திரு. சச்சிதானந்தம் அவர்களுக்கு என் அன்பு நிறைந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறே ன். இப்புத்தகத்தை மிக அழகாக வடிவமைத்து அச்சிட்டு தந்த திரு.N. கிருஷ்ணன், பிரிண்ட் ஸ்பெஷாலிடீஸ் அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறே ன்.

சென்னை அன்பன்
4-6-2015 சம்பத்குமார்

# சிறந்த குருசிஷ்ய வைபவம்
# ஸ்ரீராமானுஜர்
# ஸ்ரீகூரத்தாழ்வான் கதை

**ராமானுஜரின் பிறப்பும், காஞ்சி வாழ்க்கையும்:**

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை தழைத்தோங்க செய்யும் அதன் சிறப்பு உலகெங்கும் பரவும் பொருட்டும் ஸ்ரீமன் நாராயணன் உலகுக்கு அனுப்பிய மகான் ஸ்ரீ ராமானுஜர். அவருடைய சிஷ்யர்களிலேயே மிகவும் சிறந்தவராக கருதப்பட்டவர் ஸ்ரீ கூரத்தாழ்வான். சிறந்த குருசிஷ்யன் பக்திக்கு இவர்களையேதான் உதாரணமாக குறிப்பிடு வார்கள். ராமானுஜர் இல்லையேல் வைஷ்ணவ சமயமே இல்லை. கூரத்தாழ்வான் இல்லையேல் ராமானுஜரே இல்லை என்றும் கூறுவார்கள். ஆழ்வான் கற்றுத்தேர்ந்த அறிவு ஜீவி. வயதில் ராமானுஜரைவிட மூத்தவர். சிஷ்யனான போதும் அவரை ராமானுஜர் வாருங்கள், அமருங்கள் என்றுதான் மரியாதையுடன் அழைப்பார். ஆழ்வானும் குரு வார்த்தைக்கு மீறி எந்த செயலும் செய்ய மாட்டார்.

சித்திரை மாதம் 2017ம் ஆண்டு ராமானுஜர் பிறந்து 1000 ஆண்டுகள் முடிகின்றன. இவரது 1000வது ஜெயந்தியை சீரும், சிறப்புமாக கொண்டாட வைஷ்ணவ சமயமே காத்திருக்கிறது. இத்தருணத்தில் நாம் ராமானுஜரைப் பற்றியும் கூரத்தாழ்வான் பற்றியும், அறிந்து கொள்வது முக்கியம்.

பரமபதத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமன் நாராயணன் கலியுகம் முற்றி வரவே உலகில் தருமங்கள், ஞாயங்கள் மிகவும் நலிந்து போவதைக் கண்டு வருந்தினார். மக்கள் அழிவை நோக்கி போவதைக் கண்டு அவர்களை திருத்துவதற்கு யோசித்தார். மக்களை நல்வழிப்படுத்த அவர்களுக்கு நாலு வேதங்கள், இதிகாசங்கள், இராமாயணம், பாரதம், பாகவதம் முதலிய புராணங்களையும் கொடுத்தார். அப்படியும் திருந்தாதது கண்டு தானே பத்து அவதாரங்கள் எடுத்து மக்கள் எப்படி வாழவேண்டும் என்பதை உணர்த்திக் காட்டினார். பிறகு அவர்களுக்கு உதவ விபவ, அர்ச்சா அவதாரங்களை மக்கள் வழிபட சிலை ரூபங்களாக கொடுத்தார். அப்படியும் எதிர்பார்த்த பலன்கள் கிடைக்காமல் போகவே தனது அம்சங்களான ஆதிசேஷன், பஞ்சாயுதங்கள் மற்றும் நித்தியசூரிகளை உலகத்தில் பிறக்கச் செய்தும் மக்களுக்கு வாழ வழி காட்ட எண்ணினார். இதற்காக அவர் ஆழ்வார் ஆச்சாரியார்கள் முதலியவர்களை பிறக்க வழி செய்தார். ஆகவே குரு பரம்பரையில் முதலில் ஸ்ரீமன் நாராயணன் பிறகு மகாலட்சுமி அதன் பிறகு விஸ்வக்சேனர் மற்றும் நம்மாழ்வார், நாதமுனி, உய்யக்கொண்டான், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, திருமலை நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமலை ஆண்டார், ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர், திருக்கச்சி நம்பி முதலியோர் தோன்றி மக்களுக்கு வழிகாட்டினார்கள். இச்செய்கை ஓரளவிற்கு பலன் கொடுக்கவே எம்பெருமான் உலகிற்கு சிறந்த ஓர் ஜகதாச்சாரியாரை கொடுக்க விரும்பி ஸ்ரீ ராமானுஜரை அவதரிக்கச் செய்தார்.

சென்னையை அடுத்துள்ள ஸ்ரீபெரும்பூதூரில் வசிக்கும் ஆசூரி கேசவப் பெருமாள் சோமையாஜிக்கும், ஆளவந்தாரின் சிஷ்யரான பெரிய திருமலை நம்பியின் மூத்த சகோதரி பூமிபிராட்டிக்கும் திருமணம் நடந்தது.

பெரிய திருமலை நம்பியின் இரண்டாவது தங்கைக்கும் ஸ்ரீபெரும்பூதூர் அருகில் இருக்கும் மதுரமங்கலத்தில் வசிக்கும் கமல நயன பட்டருக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது. சோமையாஜி அவர்களுக்கு கல்யாணம் ஆகி வெகுகாலம் ஆன பின்பும் குழந்தை பிறக்கவில்லை. தம்பதிகள் இருவரும் சென்னையில் திருவல்லிக்கேணியில் உள்ள பார்த்தசாரதி பெருமாள் கோயில் வந்து வேண்டிக் கொண்டதின் பின்பு அவரது அருளால் அவர்களுக்கு ஆதிசேஷன் அவதாரமாக ஒரு அழகிய ஆண் குழந்தை 1071 கி.பி. ஆண்டு சித்திரை மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் உலகை உய்விக்க வேண்டி பிறந்தது. இவரே ராமானுஜர். இதற்கு இடையில் கமலநயன பட்டருக்கும் பெரிய பிராட்டிக்கும் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு கோவிந்தன் என்று பெயர் இட்டனர். இவரே பிற்காலத்தில் எம்பார் என்று அழைக்கப்பட்டு ராமானுஜருக்கு மிகவும் உதவியாக இருந்தார். ராமானுஜருக்கு ஒரு தங்கை இருந்தார். இவருக்கு பிறந்த பிள்ளையே முதலியாண்டான் என்று அழைக்கப்பட்டு ராமானுஜருக்கு வலது கரமாக அவர் உடனேயே இருந்து சேவை செய்து வந்தார்.

சோமையாஜின் மகனுக்கு அவரது மாமா பெரிய திருமலைநம்பியே வந்து இளையாழ்வார் என்று பெயரிட்டார். இவரே பிற்காலத்தில் வைஷ்ணவ குலம் தழைத்தோங்க வந்த ராமானுஜர் ஆவார். ராமானுஜன் என்று பெயர் சூட்டும் வரை நாமும் அவரை இளையாழ்வான் என்றே அழைப்போம்.

இளையாழ்வானுக்கு 16 வயது அடைந்ததும் திருமணம் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டது. வைஷ்ணவ சாஸ்திர சம்பிரதாயங்களை அனுஷ்டிக்கும் ஒரு ஆசாரமான குடும்பத்தில் பிறந்த தஞ்சம்மாள் என்று அழைக்கப்பட்ட லக்ஷ்ம்பாள் என்பவருக்கும் இளையாழ்

வாருக்கும் 1033 கி.பி. வருஷம் திருமணம் நடந்தது. அடுத்து, காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருப்புக்குழி என்ற ஊரில் வசிக்கும் யாதவப்பிரகாசர் என்பரிடம் கல்வி கற்க ஏற்பாடு செய்யப்பட்டது. திருப்புக்குழி என்ற ஊர் 108 திவ்ய தேசங்களில் ஒன்று. இந்த ஊர் ராமாயண சம்பந்தப்பட்டது. விஜயராகவ பெருமாள் கோயில் கொண்டுள்ள க்ஷேத்திரம். இராவணன் சீதையை ஆகாய மார்க்கமாக தூக்கிச் செல்வதையும் அந்தப் பெண் அழுதுக் கொண்டு செல்வதையும் பார்த்த ஜடாயு பறந்து சென்று ராவணனுடன் சண்டை செய்தது. பிறகு ராவணன் தனது கத்தியால் அதன் இறக்கைகளையும் வெட்டி விட ஜடாயுவும் தரையில் விழுந்து குற்றுயிராய் இறக்கைகள் இல்லாததால் இரை உண்ண முடியாமல் உயிருக்கு போராடிக் கொண்டிருந்தது. ராமர் சீதையைத் தேடி அந்த வழி வந்தபோது ஜடாயுவைக் கண்டார். ஜடாயுவும், ராமரது தந்தையும் சிறந்த நண்பர்கள். அவர் ராவணன் சீதையை இலங்கை திக்கு நோக்கி தூக்கிக் கொண்டு போவதைக் கூறி உயிரை விடும்போது ராமரிடம், தான் இறந்த பிறகு ஒரு பறவை தானே என்று தூக்கி எறியாமல் உன் கையிலேயே தகனம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டது. அதன்படியே அங்கேயே ஜடாயுக்கு ஈமக்கடன்களை ராமரே செய்து மோட்சத்துக்கு அனுப்பினார். திரு+புள்+குழி - புள்ளாகிய ஜடாயுவை குழியில் புதைத்த இடமாகையால் அந்த ஊருக்கு திருப்புள்குழி என்று பெயர் பெற்றது.

யாதவப்பிரகாசரிடம் இளையாழ்வார் 4 ஆண்டுகள் கல்வி பயின்றார். அப்பொழுது அவருக்கு வயது 16. யாதவப்பிரகாசர் ஒரு அத்வைதி. இளையாழ்வாரோ வைஷ்ணவர். ஆகவே இளையாழ்வாருக்கும் அவரது குருவுக்கும் அடிக்கடி விவாதங்களும் தர்க்கங்களும் நடக்கும். கருத்து உடன்பாடின்மை அடிக்கடி ஏற்படுவதால் அவர் மீது யாதவப்பிரகாசருக்கு வெறுப்பு

ஏற்பட்டது. அவர் அப்போது திட்டமிட்டிருந்த காசிப் பயணத்தின்போது இளையாழ்வாரை காசியில் குளிக்கும் போது எப்படியாவது மூழ்கடித்து கொல்ல, அவரும், அவரது சில சிஷ்யர்களும் முடிவு செய்து கொண்டார்கள். இதை இளையாழ்வாரின் அவருடன் படிக்கும் (சித்தி மகன்) கோவிந்தன் அறிந்து கொண்டு அவரிடம் கூறுகின்றான். இளையாழ்வாரும் சமயம் பார்த்து தப்பிக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தார். விந்திய மலையைக் கடக்கும்போது ஒருநாள் உறங்கும் வேளையில் இளையாழ்வார் தப்பித்துக் கொண்டு செல்கிறார். இரவு வேளை காட்டுப்பகுதி இருட்டில் வழி தெரியாமல் அலையும்போது எதிரில் ஒரு வேடுவனும் அவரது மனைவியான வேட்டுவ பெண்ணும் வந்தார்கள். வழி தெரியாமல் அல்லல்படும் அவரைப் பார்த்து நீங்கள் எங்கு செல்ல வேண்டும் என்று அந்த வேடன் கேட்க இளையாழ்வாரும் நடந்ததை கூறி நான் காஞ்சிக்கு அருகில் உள்ள ஊருக்கு செல்ல வேண்டும் என்று கூற, அவர்களும் நாங்களும் அங்குதான் செல்கிறோம் வாருங்கள் போகலாம் என்று கூறி நடக்க, அடந்த காடு வந்தது. அந்தக் காட்டிலேயே தங்க முடிவு செய்தனர். அந்த வேடன் மனைவிக்கோ நடந்து வந்த களைப்பால் தாகம் வாட்டி எடுத்தது. குடிக்க தண்ணீர் என்று தன் கணவனை கேட்க அதற்கு வேடன் இந்த இரவில் எங்கு போய் தண்ணீர் தேடுவது படுத்துக் கொள் காலை பார்க்கலாம் என்று கூறினான். இது கேட்ட இளையாழ்வார், ஒரு பெண்ணின் தாகத்தை தீர்க்க முடியவில்லையே என வருந்தியபடி தூங்கினார். காலை கண் விழித்து பார்த்த இளையாழ்வாருக்கு ஆச்சரியம் காத்திருந்தது. அங்கே அந்த காட்டை காணவில்லை. அருகே படுத்திருந்த வேட்டு தம்பதிகளையும் காணவில்லை. வியப்புடன் அங்கே வந்தவரிடம், இது எந்த ஊர் என்று கேட்க அவர்கள் இது சத்ய விரத

க்ஷேத்திரம். அதோ பாருங்கள், காஞ்சி தேவாதிராஜ னுடைய புண்ணிய கோடி விமானம் என்று கூறினார்கள். இளையாழ்வாரோ உணர்ச்சியில் உறைந்து விட்டார். அவரால் நம்ப முடியவில்லை. தனக்கு வழிகாட்டி, ஆட்கொள்ள வந்தது காஞ்சி தேவப் பெருமாள் என்று உணர்ந்தார். புண்யகோடி விமானத்தைப் பார்த்து விழுந்து விழுந்து சேவித்தார். அவரது கண்கள் முன்பு வரதராஜப் பெருமானின் திவ்ய மங்கள திருமேனியும், அவரது புன்முறுவலுடன் சிரிக்கும் முகமும், அகண்ட மார்பும், அபயம் கொடுக்க காத்திருக்கும் அபய ஹஸ்தமும், முக்தியை தரும் திருவடி தாமரைகளும் தெரிந்தது. பக்கத்தில் பெருந்தேவித் தாயாரின் அழகிய முகமும், பக்தர்களை கவர்ந்திழுக்கும் காந்தக் கண்களும் உதட்டில் நெளியும் சுந்தரச் சிரிப்போடு, வைரத்தோடு வைர மூக்குத்தியுடன் ஜொலிக்கும் தாமரை போன்ற திருமுகமும் தோன்ற பரவசமானார். தாயே, உலகத்திற்கெல்லாம் கருணை என்னும் நீரைக் கொடுக்கும் தாங்கள் என்னிடம் குடிக்க தண்ணீர் கேட்டும் கொடுக்க முடியாத பாவியானேன் என வருந்தினார். அவர் படுத்திருந்த இடத்திற்கு அருகில் ஓர் கிணறு இருப்பதை கண்டார். அன்று முதல், தனக்கு வழிகாட்டி அழைத்து வந்த பேரருளாளன் தம்பதிகளுக்கு தினமும் திருமஞ்சனத்திற்கு தண்ணீர் கொண்டு வரும் கைங்கர்யம் செய்ய முடிவு செய்தார். தன்னை ஆட்கொள்ள வேண்டி விந்திய மலைக்கு தம்பதியுடன் வந்து வழி காட்டிய தேவப் பெருமானை காண ஓடோடியும் சென்று வணங்கினார். வரம் தரும் வரதரும் ஆசி கூறி அனுக்கிரஹம் செய்தார். அன்று முதல் அவர் படுத்திருந்த இடத்திலிருந்த சாலை கிணறு என்ற கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து வரதருக்கு கைங்கர்யம் செய்து வந்தார். இன்றும் வரதராஜப் பெருமாளுக்கு தினம் அதே சாலை கிணற்றிலிருந்து திருமஞ்சனத்திற்கு தண்ணீர் கொண்டு வரப்படுகிறது.

## ஸ்ரீ ராமானுஜருக்கு

## வரதராஜப் பெருமாள் சன்யாசம் வழங்குதல்

இனி காஞ்சியை விட்டு காசிக்குப் போவோம். காசியை அடைந்த இளையாழ்வாரின் தம்பி கோவிந்தன் மூழ்கி நீராடி எழும்போது கையில் சிறிய லிங்கம் ஒன்று கிடைக்கிறது. ஆச்சர்யமடைந்த அவர் இது இறைவன் கட்டளை என எண்ணி முழு அத்வைத சன்னியாசியாக மாறி தன் பெயரை உள்ளம் குளிர்ந்த நாயனார் என்று மாற்றி வைத்துக் கொண்டு மதுரமங்கலம் வருகிறார். மொட்டை அடித்துக் கொண்டு பூணூலை அறுத்து எறிந்து ஏக தண்டம் பிடித்து அத்வைத சன்யாசி ஆனார். ஒரே கொம்பிலான தண்டம் பிடித்திருப்பார்கள் அத்வைத சன்யாசிகள். இவர்களுக்கு சந்தியா வந்தனம் முதலிய நித்ய கர்மானுஷ்டானங்கள் கிடையாது. ஆனால் வைஷ்ணவ சன்யாசிகளுக்கு சிகை முக்கியம். இவர்களுக்கு திரிதண்டம் உண்டு. (மூன்று கொம்புகளால் ஆன திரிதண்டம்) இவர்களுக்கு பூணல் உண்டு. நித்திய அனுஷ்டானங்கள் கட்டாயம் செய்ய வேண்டும். பிறகு கோவிந்தர் காளஹஸ்தி கோவிலுக்கு சென்று தண்ணீர் கைங்கர்யம் செய்து வரலானார்.

காஞ்சி வந்து வரதராஜப் பெருமாளுக்கு தீர்த்த கைங்கர்யம் செய்து கொண்டே இளையாழ்வார் பயில விரும்புகிறார். வேறு நல்ல ஆசிரியர் கிடைக்காததால் மறுபடியும் யாதவப் பிரகாசரிடமே வந்து சேருகிறார்.

அப்பொழுது அவருக்கு வயது 22 ( 1038 - 40 கி.பி.). அவ்வாறு கற்கும்போது ஒருநாள் அந்த ராஜாவின் மகளுக்கு பேய் பிடித்திருப்பதாகவும், எல்லாரும் யாதவப் பிரகாசர் வந்தால்தான் பேய் விரட்டப்படும் என்று கூறியதாக அரசன் கேட்டு அவரை அழைத்து வர சேவகர்களை அனுப்பினார். யாதவப் பிரகாசரும் சென்று என்ன என்னமோ செய்தும் அந்த பேய் போகவில்லை. அவரே அந்த பேயிடம் நீ என்ன செய்தால் போவாய் என்று கேட்க அதற்கு அந்த பேய் இளையாழ்வாரை சுட்டிக் காட்டி, அதோ அங்கே சிவப்பாக நிற்கும் அந்த மனிதன் தன் காலை என் தலையில் வைத்தால் போய்விடுவேன் என்று கூறி, இளையாழ்வாரும் அவ்வாறே செய்ய அந்த பேயும் விட்டு விலகியது. இதனால் பெரிய அவமானமடைந்த யாதவப் பிரகாசரும் இளையாழ்வார் இனி இங்கு படிக்க வர வேண்டாம் என்று கூறி அவரை அனுப்பி விடுகிறார். இளையாழ் வாரும் அவரைப் விட்டு பிரிந்து காஞ்சி பூர்ணர் என்று அழைக்கப்பட்ட திருக்கச்சி நம்பி என்பவரிடம் வந்து சேருகிறார். சமயம் வரும்வரை நீயும் என் மடத்தில் தங்கியிருந்து பேரருளானனுக்கு தீர்த்த கைங்கர்யம் செய்து வாரும் என்று கூற அவரும் நம்பியிடமே தங்கி வருகிறார். திருக்கச்சி நம்பிகள் பரம பக்தர். பேரருளா ளரிடம் அபார பக்தியுடைவர். எப்பொழுதும் அவர் பக்கத்திலிருந்து கொண்டு ஆலவட்டம் (விசிறி) வீசும் கைங்கர்யம் செய்து வருபவர். தேவாதி ராஜன் அமுது உண்ட பிறகு தினமும் திருக்கச்சி நம்பியிடம், ஊர்விஷயங்களை கேட்டபடி பேசி மகிழ்வாராம். அந்த அளவிற்கு நம்பியவர்கள் பிரசித்தம் என்று கூறுவார்கள்.

ஸ்ரீ ரங்கத்தில் யாமுனாசாரியார் என்ற ஆளவந்தா ருக்கு உடல் தளர்ச்சி ஏற்பட ஆரம்பித்தது. தனக்குப்

பிறகு ஸ்ரீவைஷ்ணவத்தை கட்டிக் காக்க தகுந்த ஒருவரை தேடிக் கொண்டிருந்தார். இளையாழ்வாரைப் பற்றி கேள்விப்பட்டு வரதப் பெருமாளை சேவிக்கும் நோக்கத்துடன் காஞ்சி வருகிறார். ஆளவந்தார் வருவதை கேள்விப்பட்டு திருக்கச்சி நம்பிகள் நேரில் சென்று சந்தித்து வரவேற்று பேரருளாளரிடம் அழைத்து வருகிறார். திருக்கச்சி நம்பியுடன் வரும் இளைஞனை பார்த்து ஆளவந்தார் இவன்யார் என கேட்க, நம்பிகள் அவரிடம் அறிமுகப்படுத்துகிறார். இளையாழ்வாரை பற்றி ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்த ஆளவந்தார் அவர் முகத்தில் ஜொலிக்கும் தேஜஸை பார்த்து வியப்படைந்து இவரே நமக்குப் பிறகு நமது சம்பிரதாயத்தை காக்கப் பிறந்தவன் என்று முடிவு செய்து ஸ்ரீரங்கம் திரும்புகிறார். உடனே பெரிய நம்பிகளை அழைத்து இளையாழ்வாரை காஞ்சியிலிருந்து கூட்டிச் வரச் சொல்கிறார்.

பெரிய நம்பிகளும் உடனே புறப்பட்டு காஞ்சி வந்தடைந்து இளையாழ்வாரை சந்தித்து, ஆளவந்தார் அவரை ஸ்ரீரங்கம் அழைத்து வர கூறியதை சொன்னார். இளையாழ்வாரும் ஆளவந்தாரைப்பற்றி நிறைய கேள்விப்பட்டிருந்தார். நல்ல குரு கிடைக்காமல் வருத்தப் பட்டிருந்த இளையாழ்வாரும் மிகுந்த சந்தோஷத்துடனும் பெரிய நம்பியுடன் ஸ்ரீரங்கம் செல்கிறார். அப்பொழுது அவருக்கு வயது 25 (1042 கி.பி.). இருவரும் வடகாவேரி வரும் போது ஆளவந்தார் பரமபதம் அடைந்தார் என்று கேள்விப்பட்டு ஆழ்ந்த துயரத்தில் ஆழ்ந்தார்கள். இளையாழ்வாரும் ஆளவந்தார் திருநாட்டிற்கு எழுந்தருளிய செய்தி கேட்டு, ஓர் சிறந்த ஆசிரியர் கிடைக்கப் போவதாக நினைத்து மகிழ்ந்த எனக்கு இப்படி ஆயிற்றே என வருந்தினார். அங்கு சென்று பார்க்கும் போது

ஆளவந்தாரது கையில் மூன்று விரல்கள் மடங்கியிருப்பது கண்டு இது ஏன் என பெரிய நம்பிகள் கேட்க அதற்கு அங்கு உள்ளவர்கள் ஆளவந்தார் உள்ளத்தில் மூன்று ஆசைகள் நிறைவேறாது இருப்பதையே அந்த மூன்று விரல்கள் காட்டுவதாகவும் அவற்றை வரும் இளையாழ்வாரிடம் கூறி நிறைவேற்றும்படி கேட்க இருந்ததாகவும் அதற்குள் அவர் ஆச்சரியனின் திருவடிகளை அடைந்து விட்டதாகவும் கூறினார்கள். அவை என்ன என்று இளையாழ்வார் கேட்க அவர்கள் அவற்றை கூறினார்கள்.

**1. பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதுதல்**

**2. நமது சம்பரதாயத்தில் யாருக்காவது பராசர முனிவர் பெயர் வைப்பது.**

**3. நம்மாழ்வாருக்கு செய்யும் கைங்கரியமாக அவரது பெயரை யாருக்காவது வைப்பது.**

இதை ராமானுஜர் கேட்டதும் 3 விரல்கள் தாமாகவே நிமிர்ந்து கொண்டதாக கூறுவர்.

ஆளவந்தார் மரணத்தினால் மனம் உடைந்த இளையாழ்வார் காஞ்சி திரும்பினார். திருக்கச்சி நம்பியை குருவாகக் கொண்டு பாடம் படித்து வரலானார்.

இளையாழ்வார் இவ்வாறு தன் குருவிடம் பாடம் கற்கும் வேளையிலே அவருக்கு ஓர் ஆசை ஏற்பட்டது. தன் குருவை தன் வீட்டிற்கு அழைத்து அவருக்கு விருந்து பரிமாறி மனமார சாப்பிட உபசரித்து அவர் சென்றபின் அவர் உண்ட இலையில் மிச்சமிருந்த உணவை, தான்

உண்ணவேண்டும் என்பதுதான் அந்த ஆசை. அவ்வாறே அவரை சில நாட்களாகவே விருந்துக்கு அழைத்துக் கொண்டிருந்தார். நம்பிகளோ அவரிடம், நான் வைசியன், நீயே உயர்ந்த பிராமண குலத்தில் பிறந்தவன். இது சரியாகாது எவக் கூறி மறுத்து வந்தார். கடைசியில் ஒரு நாள் வருவதற்கு ஒத்துக் கொண்டார். இளையாழ்-வார், அன்னம் தயார் செய்ய மனைவியிடம் கூறிவிட்டு அவர் வரவுக்காக காத்திருந்தார். அன்று கோவிலில் சற்று தாமதமான காரணத்தால் நம்பியவர்கள் வர நேரமாயிற்று. வெகு நேரம் வராததால் அவரைத் தேடி கோவிலை சுற்றி கிழக்குப் பக்கம் சென்றார். நம்பிகளோ மேற்குப் பக்கமாக அவரது இல்லத்திற்கு வந்தார். அவரது மனைவியோ அவரை அரை மனதுடன் வரவேற்று வீட்டின் திண்ணையில் இலை போட்டு அமர வைத்து அன்னம் பரிமாறினார். அவரும் சாப்பிட்டு விட்டு எழுந்து சென்ற பின் அந்த இலையை எடுத்து போட்டு, அந்த இடத்தை சாணியால் மெழுகி சுத்தம் செய்தார். அப்பொழுது வந்த இளையாழ்வார், இது கண்டு வருந்தி தன் எண்ணம் வீணாகியது மட்டுமல்லாது தன் குருவுக்கு பெருத்த அபசாரத்தை தன் மனைவி செய்துவிட்டாரே என்று கோபம் கொண்டு வருந்தினார். இதுவே அவர் தனது மனைவியிடம் கொண்ட முதல் அடக்க முடியாத கோபம். மனைவியால் பாகவத அபசாரம் ஏற்பட்டதே என வருந்தினார்.

இளையாழ்வாருக்கு மனதில் சில சந்தேகங்கள் இருந்து வந்தது. அதை பெருமானிடமே கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினார். திருக்கச்சி நம்பியிடம், பெருமாளுடன் அவர் பேசும் போது கேட்டு வந்து சொல்லும்படி கூறினார். அது என்ன சந்தேகங்கள் என்று நம்பிகள் கேட்க, அவர் அந்த பெருமாளுக்கே என்

சந்தேகங்களும் தெரியும் என்று கூறி கேட்டு வரச் சொன்னார். நம்பிகளும் இது என்ன புதிய விளையாட்டு என்று வியந்து அன்றிரவே தேவப் பெருமாளிடம் கேட்டார். அது கேட்டு தேவப் பெருமாளும் அந்த 6 கேள்விகளுக்கு பதிலாக 6 வார்த்தைகளை கூறி அனுப்பினார். இதுகேட்டு இளையாழ்வாரும் அக மகிழ்ந்து உள்ளம் குளிர்ந்தார். இந்த நிகழ்ச்சியை குறிப்பிட்டு வரதராஜ ஸ்வாமிக்கு கட்டியம் கூறும்போது **"திருக்கச்சி நம்பிக்கு ஆறு வார்த்தைகள் அருளிய பெருமாள்"** என்று கூறுவார்கள். வரதராஜப் பெருமாள் உத்தரவுப்படி இளையாழ்வார் திருக்கச்சி நம்பிகளிடமே பாடம் கற்று வரலானார்.

இதற்கு இடையில் 1046 கி.பி. கர்னாடக தேசத்தில் ஹொய்சல சாம்ராஜ்யத்திற்கு பிட்டி தேவன் என்ற அரசன் பேளூரில் (Belur) முடி சூடிக்கொண்டான். இவனைப் பற்றி பிறகு பார்ப்போம்.

இந்த காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார் வைகுண்டம் சென்ற பிறகு வைஷ்ணவ சமயத்தை நன்கு நடத்தி வர தகுதியானவர் யாரும் சரியாக அமையவில்லை. ஆளவந்தார் ஏற்கனவே விரும்பிய படி இளையாழ்வாரை அழைத்து வர பெரிய நம்பிகள் காஞ்சி நோக்கி வருகிறார். இளையாழ்வாரும் பாடம் கற்க தகுந்த குரு கிடைக்காத-தால் ஆளவந்தார் சிஷ்யரான பெரிய நம்பியை தேடி ஸ்ரீரங்கம் புறப்பட்டார். இந்த இருவரும் மதுராந்தகத்தில் சந்திக்கிறார்கள். இளையாழ்வார் பெரிய நம்பிக்கு நமஸ்காரம் செய்து தன் ஆசையை வெளியிடுகிறார். அதற்கு அவர் காஞ்சி இன்னும் சற்று தூரத்தில் தான் இருக்கிறது அங்கு சென்று மந்திர உபதேசம் ஆரம்பிக்க லாமே என்று கூற அதற்கு இளையாழ்வார் சம்மதிக்க

வில்லை. நமது தேகமோ அநித்யமானது. நமது முடிவு நமக்கே தெரியாது. உதாரணமாக நாம் ஆளவந்தாரிடம் செல்லும் போது நடந்தது உமக்கே தெரியும். ஏற்கனவே நான் நினைத்த காரியம் நடக்கவில்லை. ஆகவே இப்பொழுதே இங்கேயே இந்த கருணாகரப் பெருமாள் சன்னதியிலேயே என்னை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று கூற அதற்கு பெரிய நம்பிகளும் சம்மதித்து அங்கேயே த்வயம், திருமந்திரம் முதலியவற்றை உபதேசித்து அவருக்கு பஞ்சசம்ஸ்காரங்கள் செய்விக்கிறார். இன்றும் அந்த மதுராந்தகம் கோவிலில் அவருக்கு பஞ்சசம்ஸ்காரம் செய்த முத்திரைகளை அங்கு காணலாம்.

பிறகு இருவரும் காஞ்சி வந்தடைகிறார்கள். வரதராஜப் பெருமாள் கோவில் கீழ் கோபுர வாசலுக்கு அருகில் உள்ள ராமானுஜ மடத்திற்கு பக்கத்து வீட்டில் பெரிய நம்பிகளும் அவரது மனைவியும் முன்பக்கத்திலும், இளையாழ்வாரும் அவரது மனைவியும் பின்புறத்திலும், வசித்தபடியே பாடம் கற்று வரலானர். அப்பொழுது அவருக்கு வயது 23 (1049 கி.பி) ஒருநாள் ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் பசியாக இருக்கிறது சிறிது அன்னம் இருந்தால் கொடுங்கள் என்று இளையாழ்வார் மனைவியிடம் கேட்டபோது அவர் இல்லை என்று கூறி திருப்பி அனுப்பி விடுகிறார். வீடு திரும்பிய அவர், வீட்டில் அன்னம் இருந்த போது ஒரு ஸ்ரீ வைஷ்ணவனுக்கு இல்லை என்று கூறி திருப்பி அனுப்பியது அறிந்து வெகுண்டு மனைவியை கோபித்துக் கொள்கிறார். இளையாழ்வார் மனைவியை மிகவும் கோபித்துக் கொள்வது இது இரண்டாவது ஸ்ரீ வைஷ்ணவ அபசாரம்.

சில நாட்கள் கழிந்ததும் ஒரு நாள் பெரிய நம்பி மனைவிக்கும் இளையாழ்வார் மனைவிக்கும் ஒரு

தோண்டி விஷயமாக கிணற்றடியில் சண்டைபோட அது பெரிதாக வெடித்து, நம்பியின் மனைவி தன் கணவனிடத்தில் கூறினார். பெரிய நம்பிகளும் மிகவும் மன வருத்தம் பட்டு இளையாழ்வாருக்கும் கூறாமல் மனைவியுடன் ஸ்ரீரங்கம் திரும்பி வருகிறார். வீடு திரும்பி வந்த இளையாழ்வார் இதைக் கேட்டதும் தன் மனைவியிடம் மிகவும் கோபம் கொண்டு மனம் வெறுத்து மனைவிக்கு திரவியங்கள் முதலியன கொடுத்து அவரது பிறந்த வீட்டிற்கு அனுப்பி விடுகிறார். இவை அனைத்துமே தேவப் பெருமாள் திருஉள்ளப்படி, வைஷ்ணவ சமுதாயம் தழைத்தோங்க நடந்த விஷயங்கள். மனம் வெறுத்து அவர் தான் சன்யாசம் பெற முடிவு செய்து கொள்ளுகிறார். கோவில் சென்று வரதராஜப் பெருமாளைப் பார்த்து தன் முடிவை கூற, அவரும் வைஷ்ணவ சமுதாயத்திற்கு முழு நேர சேவை செய்யுமாறு கூறி, அவருக்கு சன்யாசம் வழங்கினார். வரதரும் தன் அர்ச்சகர் மூலம் காவி வஸ்திரம் திரிதண்டம் முதலியவற்றை வாங்கி வரச்சொல்லி, இளையாழ்வார் அனந்தபுஷ்கரணியில் நீராடி வந்ததும், திருக்கச்சி நம்பிகள் முன்னிலையில் அவருக்கு சன்யாசத்தை வழங்கி வைஷ்ணவ உலகத்திற்கு மகத்தான தொண்டு செய்ய ஆசீர்வாதம் செய்தார். அப்பொழுது இளையாழ் வாருக்கு வரதராஜ பெருமாள் ராமானுஜன் என்ற பெயரும் சூட்டினார். ஒரு மகத்தான ஜகதாச்சாரியர் தனது வைஷ்ணவ சமுதாயத்திற்கு சிறப்பான சேவை செய்ய புறப்பட்டார். இளையாழ்வாரை நாமும் ராமானுஜர் என்றே இனி குறிப்பிடுவோம். ஆளவந்தார் மறைவால் சூழ்ந்த இருள் ராமானுஜர் என்று சூரியன் பிரகாசமாக உதித்ததால் அகன்றது.

## ராமானுஜரின் ஸ்ரீரங்கம் வருகை

ராமானுஜர் காஞ்சியில் தனது சன்யாசி வாழ்க்கையை தேவாதிராஜனுடைய ஆசீர்வாதத்தால் ஆரம்பித்தார். தனக்கு உதவிக்கு தன் தம்பி (சித்தியின் மகன்) கோவிந்தன் உடனிருந்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணி தனது மாமா பெரிய திருமலை நம்பிக்கு திருப்பதிக்கு செய்தி அனுப்பி உதவுமாறு வேண்டினார். அவரும் உடனே காளஹஸ்தி சென்று கோவிலில் தீர்த்த கைங்கர்யம் செய்துவரும் உள்ளம் குளிர்ந்த நாயனார் என்ற பெயருடைய தனது மருமகன் கோவிந்தனை சந்தித்து அவர் கொண்டிருந்த அத்வைத கொள்கையை முறியடித்து மீண்டும் வைஷ்ணவனாக மாற்றி ராமானுஜரிடம் அனுப்பி வைத்தார். இதற்குள் அவருடைய தங்கை மகன் முதலியாண்டானும் ராமானுஜருடன் வந்து சேர்ந்து கொண்டார். காஞ்சியில் ராமானுஜர் தன்னை விட்டுச் சென்றபின் வெறுப்படைந்த யாதவப் பிரகாசரும் தன் தாயின் அறிவுரைபடி ராமானுஜரை வந்தடைந்து வைஷ்ணவனாக மாறி கோவிந்தஜீயர் எனப் பெயர் பெற்றார். சிறிது காலம் ராமானுஜருக்கு சேவை செய்து கோவிந்தஜீயர் திருநாட்டிற்கு ஏளினார்.

தொண்டை வளநாடு சான்றோருடைத்து என்பது பெரியோர்கள் கூறிய கூற்று. சிறந்த ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் அனேகர் பிறந்தது இந்த தொண்டை

வளநாட்டில் தான். பொய்கை, பூதம், பேயாழ்வார் எனப்பட்ட மூன்று முதல் ஆழ்வார்கள், திருமழிசை ஆழ்வார் முதலிய ஆழ்வார்களும், திருக்கச்சி நம்பி, ராமானுஜர், முதலையாண்டான், எம்பார், கூரத்தாழ்வான் முதலிய ஆச்சார்யர்களையும் அத்திகிரி அருளாளர் தான் வளர்த்து நமது சம்பிரதாயத்திற்கு தலை சிறந்தவர் களாக்கி அளித்தார். ஆனால் அவர்களை அனுபவித்தவரோ ஸ்ரீரங்கத்து அரங்கநாதர்தான். ஸ்ரீரங்கம் தான் வைஷ்ண-வத்திற்கு தலைநகரமாக விளங்கியது.

பெரிய பெருமாளான அரங்கநாதனும் ராமானுஜரை ஸ்ரீரங்கத்திற்கு வரவழைத்து அவர் மூலம் வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு உயர்ச்சி ஏற்படுத்த விரும்பினார். அதற்கு ஸ்ரீரங்கமே உயர்ந்த இடம் என்று நினைத்து காஞ்சியில் வீற்றிருக்கும் தேவப் பெருமாளுக்கு ராமானுஜரை தன்னிடம் அனுப்புமாறு கேட்டு ஒரு திருமுகம் எழுதினார். அதை திருவரங்க பெருமாள் அறையர் என்பவர் மூலம் காஞ்சிக்கு கொடுத்து அனுப்பினார். அரையரும் முதலில் திருக்கச்சி நம்பி அவர்களை சந்தித்து அவரோடு சென்று வரதராஜப் பெருமாள் சன்னதிக்கு எதிரில் உள்ள கச்சிக்கு வாய்த்தான் என்ற மண்டபத்தில் தேவாதிராஜனை சந்தித்தார். (இந்த கச்சிக்கு வாய்த்தான் மண்டபத்தில் தான் தேவப் பெருமாள் தினமும் திருக்கச்சி நம்பிகளுடன் உரையாற்றுவது வழக்கம்). பெரிய பெருமாள் கொடுத்த திருமுகத்தை அவரிடம் கொடுத்தார். வரதராஜருடைய புகழ் பேசும் வரதராஜ அஷ்டகத்தை தனது இனிமையான குரலில் பாடி அதற்கேற்ப அபிநயத்துடன் ஆடி மகிழ்வித்தார். பேரருளாளரும் உள்ளம் குளிர்ந்து தன் கழுத்தில் உள்ள முத்து மாலையை கழற்றி பரிசாக

அளித்தார். அதை வேண்டாம் என்று மறுத்தார் அறையர். பின் எது வேண்டுமானாலும் கேளும் தருகிறேன் என்று கூறினார். அதற்கு அறையர் எது வேண்டுமானாலும் கொடுப்பீர்களா என்று கேட்க அதற்கு வரதர் என்னையும் என் தேவியை தவிர வேறு எது கேட்டாலும் தருகிறேன் என்று கூறினார். அறையரும் தனக்கு ராமானுஜரைத் தாருங்கள் என்று கேட்க அதிர்ச்சி அடைந்த அருளாளர் வாய் தவறி என்னையும் என் தேவியையும் என்று ராமானுஜனை மறந்து கேட்டுவிட்டேன். மறுபடியும் கூறுகிறேன். என்னையும், என் தேவியையும், ராமானுஜனையும் தவிர வேறு எது கேட்டாலும தருகிறேன் என்று கூறினார். அதற்கு அறையர், கேட்ட வரம் தரும் வரதராகிய தாங்கள் வார்த்தை தவறலாமா? ராமானுஜரையே தாருங்கள் என்று கேட்க, அவரும் வேறு வழியின்றி தன் மனதுக்குகந்த ராமானுஜரை தர மிக்க மன வருத்தத்துடன் சம்மதித்தார். பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்கு பெண்ணை அனுப்புவது போல் ராமானுஜரை அறையருடன் ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பி வைத்தார் அருளாளப் பெருமான். அவருடன், கூரத்தாழ்வான், முதலையாண்டான் மற்றும் எல்லா சிஷ்யர்களும் உடன் வர, திருக்கச்சி நம்பி வழி அனுப்ப திருவரங் பெருமாள் அறையருடன் ராமானுஜர் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அப்பொழுது ராமானுஜருக்கு வயது 33. (1050 கி.பி)

ராமானுஜர் ஸ்ரீரங்கம் வரும் விஷயத்தை பெரிய நம்பிகள் மூலம் பெரிய பெருமாள் அரங்கநாதர் அறிந்து கொள்கிறார். அவரை தானே வரவேற்க விரும்பினார். விஷ்வக்ஷேனரை அழைத்து பிரதான வாயிலில் ராமானுஜரை சிறப்பாக வரவேற்க ஏற்பாடுகள் செய்யச்

சொன்னார். பின்பு தானே நேரில் சென்று வரவேற்க விரும்பி 3 அர்ச்சகர்கள் மூலம் கைத்தாங்கலாக பிரதான வாயிலுக்கு வந்து ராமானுஜரை வரவேற்றார். கைத்தாங்கலாக வரவேற்பது என்பது ஒரு அர்ச்சகர் உத்ஸவமூர்த்தியை தன் மார்போடு அணைத்துக் கொண்டு மற்ற இரு அர்ச்சகர்கள் இருபக்கமாக பிடித்துக் கொண்டு வெளியே வருதல் ஆகும். இவ்வாறு பெருமாள் தானே வெளியே வந்து நேரில் ராமானுஜரை வரவேற்றார். ராமானுஜரும் கர்பக்கிருஹத்தில் இரண்டு கல்யாண தூண்கள் இடையே இருக்கும் பெருமாள் திருஉருவத்தினை வீழ்ந்து சேவித்தார். பெரிய பெருமாளை காணும் பாக்கியத்தால் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது. வைத்த கண்ணை வாங்க முடியாமல் அந்த திருஉருவத்தை பார்த்துக் கொண்டே இருந்தார். பெறற்கரிய பாக்கியத்தை பெற்ற மகிழ்ச்சியால் உள்ளம் குளிர்ந்து ஆனந்தக் கூத்தாடினார். பைநாகப்பாம்பில் படுத்துறங்கும் பெரிய பெருமாளும் அவருக்கு ஜகதாச்சாரியன் என்று பட்டம் சூட்டி உடையவர் என்று பெயர் வைத்தார்.

அன்று முதல் ராமானுஜரும் மதில்சூழ் அரங்கத்தை செப்பனிட்டு சீர் செய்ய ஆரம்பித்தார். பழுதடைந்த மதில் சுவர்கள், கோவில் சுவர்கள், காவேரிக் கரைகள், படித்துறைகள் ஆகியவற்றை சீர் செய்யும் பணியில் முதலில் இறங்கினார். திருவரங்கன் செல்வத்தை பலவகையில் பெருக்க பல வழிகளை கையாண்டார். ஆகவே தான் ராமானுஜரின் வாழி திருநாமத்தில் தென்னரங்கன் செல்வமுற்றும் திருத்தியை வாழியே! என்று புகழப்படுகிறது. ஸ்ரீரங்கத்தில் தனது மடத்தில் தங்கிக் கொண்டு அரங்கனது கைங்கர்யங்கள் எல்லாம்

செய்து கொண்டு வரலானார். இன்றும் ஸ்ரீரங்கத்தில் அவர் தங்கிய மடம் வடக்கு வாசலிலே நாச்சியார் சன்னிதிக்கு வெளியிலே உள்ளது. முதலில் பெரிய நம்பிகளை குருவாகக் கொண்டு த்வயம், திருமந்திரம் ஆகியவற்றின் உபதேசங்களை பெற்றார்.

## கூரத்தாழ்வான் கதை

இவ்வாறு ராமானுஜர் இனிதே ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்து தனது பணிகளை கவனித்து வரலானார். இனி அவரது உத்தம சிஷ்யரான, சிறந்த சிஷ்யர்களுக்கு உண்டான எல்லா லக்ஷ்ணங்கள் பொருந்தியவருமான, தன் உயிரைக் கொடுத்தும் குருவினை காக்கும் உயர்ந்த குணமும் உள்ள, அவருக்கு வலது கரமாக விளங்கிய கூரத்தாழ்வான் கதையை ஆரம்பம் முதல் பார்ப்போம்.

பண்டை தமிழகத்தை சேர, சோழ, பாண்டிய பல்லவ அரசர்கள் சீரும் சிறப்புமாக ஆண்டு வந்தனர். ராஜராஜ சோழன் என்ற அரசன் தனியே கப்பல் படையே வைத்திருந்து கீழ் நாடுகளான மலேயா, சிங்களம் (இலங்கை) கடாரம் (பர்மா) காம்போஜம் (கம்போடியா) சாவகத் தீவுகள் (ஜாவா, இந்தோனேஷியா) போர்னியோ (புரூனே) தாய்லாந்து என்ற நாடுகளுக்கு சென்று ஜெயித்து தமிழ்நாட்டின் பெருமையை நிலைநாட்டினான். ரோமானியர்கள் தங்கள் நாட்டிலிருந்து பொன்னும் மணியும் கொண்டு வந்து கொடுத்து பதிலுக்கு நம் நாட்டில் விளையும் லவங்கம், ஏலக்காய், தூத்துக்குடியில் கிடைக்கும் முத்து, சோழ நாட்டு யானை தந்தங்கள் வாங்கிச் சென்றதாக ரோமானிய சரித்திரம் கூறுகிறது. தமிழ் புலவர்களும் வேழமுடைத்து (யானை தந்தம்) மலைநாடு (சேர நாடு) பாண்டிய நாடு முத்துடைத்து,

சோழ வளநாடு சோறுடைத்து, சான்றேருடைத்து தொண்டை வளநாடு என்று பாடியுள்ளனர்.

இத்தகைய சிறப்புடை தொண்டை நாடு பல்லவ மன்னர்கள் ஆட்சியில் தமிழ்நாட்டிற்கே திலகமாக விளங்கியது. தொண்டை நாட்டின் தலைநகரமாக காஞ்சி மா நகர் பல கலைகளுக்கும் பொக்கிஷமாக விளங்கியது. சம்ஸ்கிருத புலவர்கள்

**"புஷ்பேஷு ஜாதி**
**புருஷேஷு விஷ்ணு**
**நாரீஷு நம்பா**
**நகரேஷு காஞ்சி"**

என்று காஞ்சி நகரத்தை உயர்த்தி பாடியுள்ளனர். ஸ்வாமி வேதாந்த தேசிகனும் தனது அடைக்கலப்பத்தில்

**"முக்தி தரும் நகர் எழில் முக்கியமாம் கச்சி தன்னில்"** என்று முக்தி தரும் ஏழு புண்ணிய நகரங்களில் காஞ்சியே முதன்மை பெற்றது என்று குறிப்பிடுகின்றார்.

பண்டை நாடுகளில் காஞ்சி மாநகர் கல்வியில் சிறந்து விளங்கியது. இந்தியாவிலே மிகவும் சிறந்த பண்டை பல்கலைகழகங்களான நாலந்தா, தக்ஷசீலா, அவந்தி, காசி, காஞ்சி ஆகியவற்றுள், காஞ்சியே சிறந்து விளங்கியது. வெளி தேசத்தவர்கள் பலர் வந்து காஞ்சியில் தங்கி கல்வி பயின்றதாக சீன நாட்டு யாத்திரியர்களான பாஹியான், யுவான் சுவாங் என்ற புத்த பிட்சுக்கள் எழுதிய யாத்திரை குறிப்புகளிலிருந்து காணமுடிகிறது.

ஸ்ரீவைஷ்ணவர்கள் சேவிக்கத் தகுந்த க்ஷேத்திரங்களில் சிறந்தவை ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சி, திருநாராயணபுரம் (மேல் கோட்டை) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஸ்ரீரங்கம் மங்களநிதிம், கருணாநிவாசம்,
ஸ்ரீவேங்கடாத்திரி சிகராயை காளமேகம்
ஸ்ரீஹஸ்தி சைல சிகரேஜ் வலபாரி ஜாதம்
ஸ்ரீமன் நமாமி சிரஸா எதிசைல தீபம்

இத்தகைய சிறப்புடைய காஞ்சி மாநகரத்திற்கு அருகே 7 மைல் (12 கி.மீ) தூரத்தில் உள்ள ஊர்தான் கூரம். இந்த ஊரின் சிறப்பினை கீழ்வரும் நாட்டுப் பாடலில் காணலாம்.

'கூரத்துச் சம்பா
குமரகோட்டத்துக்கீரை
கோபுரவாசல் படி காற்று
வெள்ளை குளத்து தீர்த்தம்
வரதர் வாசம்'

இவை காஞ்சியின் சிறப்புகள். கூரத்தில் விளையும் சம்பா நெல் உயர்ந்த ரகமாக கருதப்பட்டது.

இன்று கிராமமாகக் காட்சியளிக்கும் கூரம் ஒரு காலத்தில் கூரமாநகர் என்று அழைக்கப்பட்டது. இதற்குப் பஞ்சலிங்க க்ஷேத்திரம் என்று ஒரு பெயரும் இருந்தது. ஊரைச் சுற்றி நான்கு மூலைகளிலும், நடுவில் ஒரு லிங்கமாகவும் 5 லிங்கங்கள் சூழ்ந்த ஊர் என்பதற்கு பஞ்சலிங்க க்ஷேத்திரம் என்று அழைக்கப்பட்டது. நடுவில் உள்ள கோவில் பல்லவ மன்னனான பரமேச்வர வர்மன் என்பவனால் கட்டப்பட்டது. ஸ்வாமியின் பெயர், [illegible]. மிருந்த வேலைப்பாடு உடைய இந்தச் சிலை, கோவில் இடிந்து சிதலமாகி விட்டதால் தொல்பொருள் ஆராய்ச்சி துறையினரால் எடுத்துச் செல்லப்பட்டது. தற்போது மதுரையில் 1000 கால் மண்டபத்தில் உள்ள அருங்காட்சியகத்தில்

இருப்பதாகக் கேள்வி. பல்லவர் காலத்தில் கட்டப்பட்ட கோவில் அமைப்பாகிய கஜ பிருஷ்டம் அல்லது தூங்கானைமாடம் கோவில்கள் அனைத்திற்கும் இக்கோவில் மிகப் பழைய சான்று. கூரம் செப்பேட்டில் கண்டபடி இக்கோவில் கி.பி. 7ம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பல்லவ மன்னன் முதலாம் பரமேஸ்வர வர்மனால் கட்டப்பட்டது என்பதும், இக்கோவிலின் பெயர் விந்த பல்லவ பரமேஸ்வர கிருஹம் என்பதும் தெரிய வருகிறது. இக்கோவில் கட்டும் வரை, மகேந்திரவர்ம பல்லவன், நரசிம்ம பல்லவன் முதலிய அரசர்கள் குடைவரை கோவில் எனப்படும் முறையில் பாறையைக் குடைந்து கோவில் கட்டி வந்தார்கள். பரமேஸ்வர பல்லவன் தான் முதல் முதலாக இந்தக் கூரத்து கோவிலைப் பரீக்ஷார்த்தமாக, சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டினான் என்று தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் குறிப்புகள் மூலம் அறிய முடிகிறது. இந்தச் செங்கற்கள் தற்போதுள்ள செங்கற்களை விட 1½ மடங்கு நீளமும், 1½ மடங்கு அகலமும் கொண்டது. இதற்குப் பிறகு பல்லவர் கட்டிய கோவில்கள் எல்லாம் செங்கற்களில் கட்டப்பட்டவை. இந்தக் கோவிலில் அகழ்வாராய்ச்சியின் போது மண்ணுக்கு அடியில் கண்டு எடுக்கப்பட்ட செப்பேடுகள் கூரத்துச் செப்பேடுகள் என்று பெயரிடப்பட்டுத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையிடம் உள்ளது. இந்தச் செப்பேடுகள் மூலம் பல்லவர்கள் காலம் முதலிய பல விஷயங்கள் அறிய முடிந்தது என்று பல்லவ சரித்திர நூல்கள் தெரிவிக்கின்றன.

மிகவும் மோசமாக இடிந்து கிடந்த இக்கோவிலைச் சில வருஷங்களுக்கு முன்பு, சில சைவர்கள் எடுத்துக் கொண்ட பெருமுயற்சியால், மறுபடியும் ஓரளவுக்குக்

கட்டப்பட்டது. அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியால் வரும்படி ஏதுமற்ற இக்கோவிலைத் திருத்தணி தேவஸ்தானத்துடன் இணைத்து, அதன் மூலம் நித்திய பூஜைகள் செய்யப்பட்டு வருகின்றது. இந்தக் கோவில் ஊருக்குள் நுழைந்தவுடன் வலது பக்கம் உள்ளது.

இந்தக் கோவில் தவிர 50 வருடங்களுக்கு முன்பு உள்ளூர் அன்பர்கள் கட்டிய தேசிகர் கோவில் ஒன்று ஆழ்வான் கோவிலுக்கு வெளியே வலது புறத்தில் உள்ளது. இதில் லக்ஷ்மி ஹயக்ரீவர் மற்றும் ஸ்ரீ வேதாந்த நிகமாந்த தேசிகன் அமர்ந்து அருள்பாலித்து வருகிறார்கள். ஆஞ்சநேயர் சன்னிதியும் உண்டு.

இந்த ஊரின் நடுநாயகமாக மத்தியில் அமைந்துள்ள ஸ்ரீ கூரத்தாழ்வான் கோவில். நுழைந்த உடன் நேராக சற்று உயரத்தில் அமைந்துள்ளதுதான் ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி. கர்பகிருஹத்திற்கு முன் உள்ள சிறிய மண்டபத்தில் தூண்களில் பல்லவர்கள் சின்னமான அமர்ந்த நிலையில் உள்ள சிம்மங்களைக் காணலாம். இதே சின்னங்களை வெளிச் சுற்றுப் பிரகாரத்திலும் காண முடிகிறது. இதன் மூலம் இக்கோவிலை பல ஆண்டுகளுக்கு முன்பு பல்லவர் காலத்தில் கட்டியதாக ஊகிக்க முடிகிறது. இந்த சந்நிதிக்கு வலதுபுறத்தில் பங்கஜவல்லித் தாயார் சந்நிதி உள்ளது. இந்தத் தாயார் சந்நிதி சமீப காலத்தில் சுமார் 100 வருடங்களுக்குள் கட்டப்பட்டதாகத் தெரிகிறது இந்த தாயார் மஹாவரப்பிரசாதி. குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இங்கு வந்து வேண்டிக் கொண்டால் குழந்தை பிறக்கும் என்று நம்பப்படுகிறது. இதற்குச் சான்றாக பலர் கட்டிய தொட்டில்கள் சந்நிதியில் தொங்க விடப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஆரம்ப காலத்தில் இக்கோவிலின் மூலவராக ஸ்ரீ நரசிம்ம ஸ்வாமி பிரதிஷ்டை செய்ததாக தெரிகிறது. ஏதோ ஒரு சில காரணங்களுக்காக அந்த சிலை அகற்றப்பட்டு ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் சிலையை மூலவராக பிரதிஷ்டை செய்யப் பட்டது. பிறகு சுமார் 50 அல்லது 60 வருடங்களுக்கு முன்பு, அந்த சுதையிலான சிலை மாற்றப்பட வேண்டிய நிலை ஏற்பட்டதால், தற்போதுள்ள கல்லால் ஆன சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டது.

பெருமாள் சந்நிதிக்கு இடதுபுறம் ஸ்ரீகூரத்தாழ்வான் சந்நிதி உள்ளது. இது மிகப் பெரிய சந்நிதி. கர்ப-க்ருஹத்திற்கு வெளியே சுமார் 100 அன்பர்கள் அமர்ந்து சேவா காலம் செய்யக் கூடிய பெரிய மண்டபம் உள்ளது. இந்த மண்டபத்தின் வலது புறம் ஸ்ரீ ஆண்டாள், ஸ்ரீநம்மாழ்வார், ஸ்ரீதிருமங்கை ஆழ்வார், ஸ்ரீஎம்பெரு மானார், ஸ்ரீ பராசரபட்டர், ஸ்ரீ பிள்ளை லோகாச்சாரியார், ஸ்ரீ மணவாள மாமுனிகள் சந்நிதிகள் உள்ளன. ஆழ்வான் சந்நிதியை சுற்றி பெரிய உள் பிரகாரம் உள்ளது. உற்சவ காலத்தில் ஆழ்வான் புறப்பாடு இங்கு நடக்கும். ஆழ்வான் சந்நிதிக்கு எதிரில் வாகன மண்டபமும், வலதுபுறம் ஆஞ்சநேயர் சந்நிதியும் உள்ளது. பத்து நாட்கள் உற்சவத்தில் ஆழ்வான் வாகனங்களில் வீதி உலா வருவது கண் கொள்ளாத காட்சியாகும். ஒன்பதாம் நாள் ஆழ்வான் திருத்தேரில் ஊர்வலம் வரும் அழகே அழகு. 10வது நாள் சாற்றுமறை. இந்த 10 நாட்கள் உற்சவம் தை மாதத்தில் மிகச் சிறப்பாய் நடைபெறும்.

## கூரத்தாழ்வான் பற்றிய கர்ண பரம்பரை கதைகள்

கிராமத்திலிருந்து ஜனங்கள் நகரத்திற்குக் குடியேறத் தொடங்கியதால் கிராமத்தின் ஜனத்தொகை குறைந்து அங்கே வழங்கும் கிராமீயப் பாடல்களும் கர்ண பரம்பரை கதைகளும் அழிந்து வருகின்றன. உதாரணமாக அங்கு வழக்கத்திலிருக்கும் சில கதைகள் நினைவில் கொள்ள வேண்டியவைகள். கூரத்தாழ்வானின் முன்னோர்கள் மதுரையை அடுத்துள்ள அழகர் கோவில் எனப்பட்ட திருமாலிருஞ்சோலை என்னும் க்ஷேத்திரத்தில் வசித்து வந்து அங்கு கோவில் கொண்ட கள்ளழகருக்குக் கைங்கர்யம் செய்து வந்ததாக ஆழ்வானே தான் இயற்றிய ஸ்ரீ ஸுந்தர பாஹுஸ்தவம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆழ்வான் எங்கு திருஅவதாரம் செய்தார், அவரது இளமை பருவம் எங்கு கழிந்தது, எப்படி கூரம் வந்தார், எப்படி கூரத்திற்கு அரசனாகி கூரேசர் எனப் பெயர் பெற்றார் என்ற விவரங்கள் தெரிய வில்லை. ஏடுகள் எல்லாம் அவர் கூரத்திற்கு அரசராகிய காலத்திற்கு பிறகு நடந்த நிகழ்ச்சிகளைத் தான் கூறுகின்றன. ஆனால் ஒரு கர்ண பரம்பரை கதை திருமாலிருஞ்சோலைக்கும் கூரத்திற்கும் முடிச்சு போடுகிறது.

***கதை 1:***

முன்னொரு காலத்தில் ஒரு பிரும்ம ரிஷி சகல கலைகளிலும் தேர்ச்சிப் பெற்று நான்கு வேதங்களையும்

கற்று சிறந்து விளங்கினார். ஆனால் அவர் மிகவும் மமதை கொண்டவர். ஓர் யாகத்தைச் செய்யும்போது மமதை காரணமாக அலட்சியமாய்ச் சில தவறுகளைச் செய்துவிட, இதன் காரணமாக யாகம் தவறிவிட, அங்கு தோன்றிய யாகபுருஷன் மிகவும் கோபம் கொண்டு அவரைப் பிரும்ம ராக்ஷனாகப் போகும்படிச் சபித்து விட்டார். தவறை உணர்ந்த ரிஷி மமதை அகல, சாப விமோசனம் வேண்டினார். அதற்கு அவர் உன் மமதை அழியும்படி எப்பொழுது ஒரு சிறுவனால் வாதத்தில் தோற்கடிக்கப்படுகிறாயோ, அப்பொழுது உன் சாபம் ஒழிந்து, மறுபடியும் பிரும்ம ரிஷி பதவியை அடைவாய் என்றார்.

பிறகு அந்தப் பிரும்ம ராக்ஷசன் இந்தக் கூரத்திற்கு வெளியே தங்கியிருந்தான். இரவு வேளையில் ஊருக்குள் வந்து எதிர்த்த ஜனங்களை அடித்துக் கொன்று வீடுகளில் புகுந்து வேண்டிய உணவைத் தின்று வந்தான். ஒருநாள் ஊர் ஜனங்கள் எல்லாம் ஒன்று திரண்டு அந்த ராக்ஷசனைச் சந்தித்து ஒருவேண்டுகோள் விடுத்தனர். ஒவ்வொருவர் வீட்டிலும் தாங்கள் இரவில் உண்டபிறகு, உணவை விதவிதமாய்ச் சமையல் செய்து அவனுக்காக வைத்து விட்டு, ஊருக்கு வெளியே உள்ள நந்தவனத்திற்குச் சென்று படுத்து, மறுநாள் திரும்பி வருவதாகவும், இரவு அந்த ராக்ஷசன் வந்து வேண்டிய உணவை, வேண்டிய வீட்டில் உண்டு, யாரையும் துன்புறுத்தாது செல்ல வேண்டும் என்றும், காலையில் அவர்கள் தங்கள் வீட்டிற்குச் சென்று அவரவர்கள் வேலையைத் தொடங்கு வதாகவும் வேண்டிக் கொண்டனர். இதற்கு அந்த ராக்ஷசன் சம்மதிக்கவே, இந்த உடன்படிக்கை படி அந்தக் கிராம மக்கள் காலம் கடத்தி வந்தனர்.

ஒருநாள் அந்த ஊருக்கு ஒரு இளம் சிறுவன் மாலை நேரத்தில் வந்து சேர்ந்தான். ஊர் ஜனங்கள் எல்லாரும் படுக்கை தலையணையுடன் ஊரை விட்டு வெளியேறு வதைக் கண்டு வியப்படைந்து என்ன காரணம் என்று கேட்டான். அவர்கள் தங்கள் கதையைக் கூறி, அவனையும் தங்களுடன் வந்து படுத்துத் தூங்கி விட்டு மறுநாள் காலை ஊருக்கு வரலாம் என்று கூறினர். சிறுவனோ தான் வெகு தூரத்திலிருந்து வருவதாகவும், மிகுந்த களைப்படைந்துள்ளதாகவும் அங்கேயே தங்குவதாகவும் கூறி மறுத்து விட்டான். பிறகு ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்து உறங்க ஆரம்பித்து விட்டான். ஜனங்களோ, அந்தச் சிறுவனுக்கு நேரப் போகும் கதியை நினைத்து வருந்தியபடி வெளியேறினர்.

காலையில் திரும்பி வந்த ஜனங்கள், ஐயோ பாவம். மிகவும் தேஜஸ் கொண்ட அந்தச் சிறுவன் பிணமாகக் கிடக்கப் போகிறானே என்ற வருத்தத்துடன் உள்ளே வந்தனர். ஆனால் அங்கே அவர்கள் கண்ட காட்சி அவர்களை அதிர்ச்சியுள்ளாக்கியது. தெருவிலே அந்த ராக்ஷசன் பிணமாகக் கிடக்க, அருகில் இருந்த ஒரு திண்ணையில் அந்தச் சிறுவன் உறங்கிக் கொண்டிருந்தான். இதைக் கண்டு வியப்புற்று, அந்தச் சிறுவனை எழுப்பி நடந்ததை வினவினர். அவன் தங்கள் இருவருக்கும் வாக்கு வாதம் நடைபெற்றதையும், அதில் அந்த ராக்ஷசன் தோற்கவே சாப விமோசனம் பெற்று, தன் பூத உடல் விட்டுப் பிரும்ம ரிஷியாக மாறி மேலுலகம் சென்றதையும் விவரித்தான். இனிமேல் நீங்கள் எல்லாம் பயமின்றி வாழலாம் எனக்கூறி தன் பயணத்தைத் தொடர சித்தமானான். உடனே ஊர் ஜனங்கள் எல்லாரும் அவன் காலில் விழுந்து வணங்கித் தங்களுக்கு மறு

வாழ்வளித்த அந்தச் சிறுவனே தங்களுக்கு அரசராகி என்றும் காப்பாற்றி அருள வேண்டினார்கள். அவர்களது அன்புக் கட்டளையை மீற முடியாமல் சம்மதிக்கவே அவனை அரசனாக்கி கூரேசர் எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர் என்று கூறுகிறது அந்தக் கர்ண பரம்பரை கதை.

**கதை 2:**

மற்றொரு கதை கூரத்தாழ்வான் திருமணம் பற்றியது. அறிவில் சிறந்த ஆழ்வான் அரசரானதும் அந்த ஊர் மிகவும் செல்வச் செழிப்போடு உயர்ந்து விளங்கியது. மக்கள் குறையின்றி வாழ்ந்தார்கள். வருபவர்களுக்கு எல்லாம் இல்லை என்று கூறாமல் அரண்மனையில் அன்னதானம் செய்யப்பட்டது. (இன்றும் கூரத்தில், கோவிலில் தினமும் இரவில் மூன்று தேசாந்திரிகளுக்கும் பகலில் ஒருவருக்கும் ஒரு தர்ம ஸ்தாபனம் (Charity) மூலம் உணவளிக்கப்பட்டு வருகிறது).

அரசர்களுக்கு ஏற்பட்ட கடமைகளின் படி கூரேசரும் இரவில் மாறுவேடம் பூண்டு, நகர்வலம் வீதி வீதியாக வந்து கண்காணிப்பது வழக்கம். ஒருநாள் ஒரு வீட்டில் இரவு வெகு நேரம் ஆனபிறகும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது தெரிந்தது. பேச்சுக் குரலும் அழுகை சப்தமும் கேட்கவே அரசர் ஜன்னல் மூலமாகப் பார்த்தார். உள்ளே ஒரு கணவனும் மனைவியும் பேசிக் கொண்டிருந்தனர். அருகில் சென்று அவர்கள் பேசுவதைக் கூர்ந்து கேட்டார். கணவன் மனைவியைப் பார்த்து, 'நீ சொல்வதுதான் சரி காலை விடிவதற்கு முன்பே நமது மகளை எழுப்பி, குளிக்கப் போகலாம் வா என்று

கூப்பிட்டுக் கொண்டுவா. நாம் மூவரும் ஊர் கோடியில் உள்ள ஒரு கிணற்றிற்குச் சென்று, நமது பெண்ணைக் கிணற்றில் தள்ளி விட்டு, நாமும் விழுந்து உயிரை விட்டு விடலாம்' என்று கூறினான். மனைவியும் சம்மதிக்கவே இருவரும் விளக்கை அணைத்து விட்டுப் படுத்து விட்டனர். உடனே கூரேசர் திடுக்கிட்டுத் தனது இரு காவலர்களை அழைத்து, வீட்டின் முன்புறமும், பின்புறமும் காவல் செய்ய உத்தரவிட்டார். காலை இந்த வீட்டிலிருந்து முன்புறமோ அல்லது பின்புறமோ யாராவது வெளியே வந்தால் அவர்களைக் கைது செய்து அரண்மனைக்குக் கொண்டு வர உத்தரவிட்டார்.

மறுநாள் காலை அந்த மூன்று பேர்களும் கூரேசரின் முன்பு ஆஜர்படுத்தப்பட்டனர். அரசர் நேற்று இரவு நகர் வலம் வரும்போது அவர்கள் வீட்டில் நடுநிசி ஆனபிறகும் விளக்கு வெளிச்சமும் தொடர்ந்து அழுகைக் குரலும் கேட்டதற்குக் காரணம் என்ன என்று கேட்டார். அதற்கு அந்த அந்தணர் சிறிது தயங்கியபடியே கூறலானார். அரசே சில மாதங்களுக்கு முன்பு என் மகள் பெரியவளானாள். அப்பொழுது அவர் பெண்ணின் ஜாதகத்தைக் குறித்தபோது அவருக்கு ஒரு திடுக்கிடும் உண்மை புலப்பட்டது. ஜாதகத்தில் அவரது மகளுக்குத் திருமணம் ஆகி, என்றைக்கு அவள் தன் கணவனுடன் சேருகிறாளோ அன்றே அவளது கணவன் இறந்து அவள் விதவை ஆகி விடுவாள் என்றிருந்தது கண்டு அதிர்ச்சியடைந்தார். சில காலம் இந்த உண்மையைத் தன் மனைவிக்குக்கூட தெரிவிக்கவில்லை. நாள் ஆக ஆக அவரது மனைவி தன் பெண்ணுக்குத் திருமணம் செய்ய தொந்தரவு செய்யவே அன்று இரவு உண்மையைக் கூறி இதிலிருந்து தப்பிக்கவே காலையில் மூவரும் உயிரை

இழக்க முடிவு செய்ததாகக் கூறினார். திருமணம் செய்தாலோ மகள் விதவை ஆகி, ஆயுள் முழுவதும் அவளைப் பார்த்தபடியே கண்ணீர் விட்டு வாழ வேண்டும். இல்லை என்றால் திருமணம் செய்யாமல் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தால் உலகம் அவர்களைத் தூற்றும். ஆகவேதான் உயிரை விடத் துணிந்ததாகக் கூறினார்.

அரசர் சிறிது நேரம் யோசித்தார். குடிகளின் குறையை நீக்கி அவர்கள் சந்தோஷமாக வாழ வைப்பதே அரசனுடைய கடமை. இந்த வழக்கோ மிகவும் சிக்கலானது. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து அந்தப் பெரியவரிடம், தானே அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறினார். உடனே திடுக்கிட்ட அந்த அந்தணர் அலறி அடித்துக் கொண்டு அவர் காலில் விழுந்து அரசே தாங்கள் சிறப்பாக அரசாண்டு வருகிறீர்கள். உங்கள் உயிர் பிரிய நான் எந்த விதத்திலும் காரணம் ஆக மாட்டேன் என்று மறுத்தார். உடனே கூரேசர் அவரிடம், திருமணம் மட்டும் ஆகினால் உயிர் போகாது. ஆனால் நாங்கள் உடல் உறவு கொள்ளும் போதுதானே நான் இறப்பேன். அவ்வாறில்லாமல், திருமணத்திற்குப் பிறகும் தன்னால் பிரும்மசரிய விரதத்தைத் தொடர முடியும். ஆகவே நான் இறக்காமல் உயிர் வாழ முடியும். அதே சமயம் உங்கள் துயரைத் தீர்க்கவும் முடியும் என்று கூறினார். பிறகு மிகவும் தயக்கத்துடன் அந்த அந்தணரும் சம்மதிக்கவே கூரேசருக்கும் அந்த அந்தணரின் மகள் ஆண்டாளுக்கும் சிறப்பாகத் திருமணம் முடிந்தது.

திருமணம் ஆனதும் அவர் தன் மனைவியை அழைத்து அரசன் என்ற முறையில் உன்னைத் திருமணம் செய்து கொண்டதின் மூலம், மூன்று உயிர்களைக் காப்பாற்றி என் கடமையைச் செய்து விட்டேன். உன் பெற்றோர்களது துன்பங்களையும் தீர்த்து விட்டேன். அடுத்துக் கணவன் என்ற முறையில் மனைவிக்கு ஆற்ற வேண்டிய கடமையை மனத்தில் கொண்டு உன்னிடம் ஒரு கேள்வியைக் கேட்கப் போகிறேன். ஒளிக்காமல் நீ மனம் திறந்து உன் பதிலைக் கூற வேண்டும். கணவனி-டமிருந்து சில நிமிடங்களே அனுபவிக்கக் கூடிய சிற்றின்பம் வேண்டுமா அல்லது வாழ்நாள் முழுவதும் பிரும்மசாரிய விரதத்தை அனுசரித்து எம்பெருமானை ஆராதித்து அடையும் பேரின்பம் வேண்டுமா என்று முடிவு செய்து கூறு. கணவன் என்ற முறையில் நான் இரண்டிற்கும் தயார் என்று கூறினார். அதற்கு ஆண்டாள் உடனே அவரது காலில் வீழ்ந்து வணங்கி, ஸ்வாமி, ஏற்கனவே தாங்கள் தங்கள் உயிரைப் பணயம் வைத்து எங்கள் மூன்று பேர்கள் உயிரைக் காப்பாற்றி எனக்கு ஓர் உயர்ந்த வாழ்க்கையினைக் கொடுத்துள்ளீர்கள். இதற்குக் கைமாறாக நானும் வாழ்நாள் முழுவதும் பிரும்மசரிய விரதத்தைக் கடைப்பிடித்துத் தங்களுக்குப் பணிவிடை செய்வதையே தலையாய கடனாகக் கொண்டு வாழ்ந்து வருவேன் என்று கூறினார். அவ்வாறே வாழ்ந்து காட்டினார். மிகச் சிறந்த மனைவிக்கு எடுத்துக்காட்டாக உலகத்தார் போற்றும்படி ஆழ்வானுக்குப் பணிவிடைகள் செய்து சிறந்த பெண்மணி என்று பெயர் பெற்றார்.

**கதை 3:**

பின் ஒரு காலத்தில் ஆழ்வான் தான் வரதராஜப் பெருமாளுக்கு அபசாரப்பட்டதாகக் கருதி தன்

செல்வங்களை எல்லாம் தானம் செய்து ராமானுஜரது அடிபணிந்து அவரது சிஷ்யனாகவும் அவரையே தனது ஆச்சாரியனாகவும் கொண்டு வாழ்ந்து வந்தார். தினமும் உஞ்ச விருத்தி செய்து எளிமையாக ராமானுஜருக்குத் தொண்டு செய்து வாழ்ந்து வந்தார். அப்பொழுது தொடர்ந்து சில நாள்கள் மிகவும் மழை பொழியவே ஆழ்வானால் உஞ்ச விருத்திக்கு வெளியில் செல்ல முடியவில்லை. ஆகவே சமைப்பதற்கு வீட்டில் எந்தப் பொருளும் இல்லாத நிலையில் இருவரும் நீர் அருந்தி விட்டு இறைவன் நாமத்தை நினைத்தபடியே உறங்க ஆரம்பித்தனர். அப்பொழுது அரங்கன் கோவிலில் அவர் அமுது உண்ணும் போது அடிக்கப்படும் கோவில் மணியின் ஓசை கேட்டது. பெண்ணின் மனம் பித்தல்லவா? இது கேட்டு ஆண்டாள் அரங்கனை மனதில் நினைத்து, அரங்கனே, வெளியில் நல்ல மழை பெய்கிறது. என் கணவரால் வெளியே சென்று உஞ்ச விருத்தி செய்து உணவைக் கொண்டு வர முடியவில்லை. ஆகவே என் கணவர் நீர் அருந்தி பட்டினியில் படுத்துள்ளார். உணவு சம்பாதித்து வர எங்களுக்கு வேறு பிள்ளைகளும் இல்லை. இப்படியிருக்க நீங்கள் மட்டும் திருப்தியாக அமுது செய்வது நியாயமா? என்று மனதில் நினைத்துக் கொண்டார். இதனை ஞானத்தால் அறிந்த அரங்கநாதன், உத்தம நம்பி என்ற பட்டரிடம் கனவில் தோன்றி, உடனே ஆழ்வான் வீட்டிற்குப் பிரசாதங்களை அனுப்ப உத்தரவிட்டார். பிரசாதத்துடன் வீட்டுக் கதவைத் தட்டிய நம்பியைக் கண்டு ஆழ்வான், மனைவியைப் பார்த்து நீ ஏதாவது மனதில் நினைத்தாயா? என்று கேட்டார். அதற்கு மனைவி ஐயா, உங்கள் பெருமாள் பிரசாதம் அனுப்பியது பற்றிக் கேட்டீர்களே, எனது பெருமாளாகிய தாங்கள் பட்டினி

கிடப்பதை எப்படி என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியும் என்று கூறினார். ஆழ்வானும் எல்லாம் அவன் அருள் என்று நினைத்து உணவை வாங்கி ஒரு கை நிறைய பிரசாதத்தை மனைவிக்குக் கொடுத்து, மற்றொரு கை பிரசாதத்தைத் தான் உண்டார். அவர் மனைவியும் பக்தியுடன் வாங்கிய அந்தப் பிரசாதத்தை அரங்கனை நினைத்து உண்டாள். மக்கள் இல்லையே என்று குறையுடன் ஆண்டாள் வேண்டியதை உணர்ந்த அரங்கன் பிரசாதத்தின் மூலம் இரண்டு ஆண் குழந்தைகளை அருளினார். அவர்களே பராசர பட்டர், வேத வியாச பட்டர். இந்தக் கதை மூலம் ஆழ்வானும் அவரது மனைவியும், இல்லறத்திலிருந்தே சிறப்பாகப் பிரும்மசர்ய விரதம் காத்த பெருமையும், அவர்களது வைராக்கியமும் நன்கு விளங்கும்.

**கதை 4:**

ராமாயணத்தில் ராமருக்கு லக்ஷ்மணன் சேவை யாற்றியது அனைவருக்கும தெரிந்ததே. அம்மாதிரியே ராமருக்கும் தான் மூத்தவனாக இருந்தபடியே இளையவனுக்குச் சேவை செய்து தன் நன்றிக் கடனைத் தீர்க்க எண்ணினார்.

தன் ஆசையைக் கலியுகத்தில் நிறைவேற்றிக் கொள்ள திருஉள்ளம் கொண்டார். லக்ஷ்மணனின் அம்சமாக ராமானுஜரையும், தன் அம்சமாக கூரேசரையும் படைத்தார். ராமரும் அரசனல்லவா? கூரேசர் ராமானுஜரை விட 8 வயது மூத்தவர். இளையவர், என்னதான் படித்தவராக இருந்தாலும் மூத்தவர் அவருக்குச் சேவை செய்ய முடியாதல்லவா? ஆகவே ராமானுஜர் (இராமா - அனுஜன் என்றால் ராமருக்கு சகோதரன் அல்லது லக்ஷ்மணன் என்று பொருள்).

சந்நியாசம் பெறும் வரை ஆழ்வான் கூரத்தில் அரசனாக இருந்தார்.

ராமானுஜர் சந்நியாசம் பெற்றார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும், வரதராஜப் பெருமாள் திருக்கச்சி நம்பியிடம் தன்னைப் பற்றிக் கூறியதைச் சாக்காக வைத்து, அரச பதவி மற்றும் தன் சொத்துக்கள் அனைத்தையும் தான தருமம் செய்து விட்டு, உடுத்திய உடையுடன் மனைவியுடன் காஞ்சி சென்று ராமானுஜரிடம் சிஷ்யனாக அடைக்கலம் ஆனார். லக்ஷ்மணன் ராமருக்கு சேவை செய்ததை விடப் பல மடங்கு சிறப்பாகச் சேவை செய்தார். லக்ஷ்மணன் ராமரைக் கண்ணுக்குள் இமை போல் காத்தாரே தவிர ராமருக்கு எந்த ஆலோசனையும் வழங்கியதில்லை. ஆனால் ஆழ்வானோ, ராமானுஜர் ஸ்ரீபாஷ்யத்திற்கு விளக்கம் எழுதியபோது பல அறிய கருத்துக்களை வெளிப்படுத்தி உதவினார். ஆகவே தன் அம்சமான ஆழ்வான் மூலம் லக்ஷ்மணரின் அம்சமான ராமானுஜருக்குச் சேவை செய்வதன் மூலம் ராமர் தன் ஆசையை நிறைவேற்றிக் கொண்டார் என்று கூறுவதும் உண்டு.

கூரத்தைத் தன் புராதன சொந்த ஊராக (Native Place) கொண்டவர்கள் பலரும் கௌண்டின்ய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். (வாசிஷ்ட, மைத்ராவருண, கௌண்டின்ய திரியா ரிஷி)

இவர்கள் அனைவரும் வீரவல்லியார் என அழைக்கப்பட்டனர். ராமானுஜர் வைஷ்ணவத்தைக் காக்க 74 சிம்மாசனாதிபதிகளை அமைத்தபோது, கௌண்டின்ய கோத்திரத்தைச் சேர்ந்த வீரவல்லி மற்றும் இளையவல்லி ஆகியோரை ராமானுஜருக்கு மெய்க் காவலர்களாக நியமித்ததாகவும் பெரியவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்.

## பொன் வட்டில் எறிந்த புகழுடையோன் ராமானுஜருக்கு சிஷ்யன் ஆதல்

இதுவரை நகரத்தின் சிறப்பு, ஆழ்வானைப் பற்றிய கர்ண பரம்பரை கதைகள் முதலியவற்றைப் பார்த்தோம். இனி ஆழ்வானைப் பற்றி அறிஞர்கள், பண்டிதர்கள், சமயப் பெரியோர்கள், ஏடுகளிலும், வாய்மொழியாகவும், சொற்பொழிவுகளிலும் கூறிய கருத்துக்களை இங்கு தொகுத்துத் தருகிறேன்.

காஞ்சிக்கு 12 கி.மீ. (7 மைல்) தூரத்தில் உள்ள சிறிய கிராமம் கூரம். முன்பு இது கூரமாநகர் என்று அழைக்கப் பட்டது. இதில் ஸ்ரீ ராம மிஸ்ரர், பெருந்தேவி ஆகிய தம்பதிகளுக்குச் சௌம்ய வருஷம் தை மாதம் சுக்ல பக்ஷ பஞ்சமியில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் வியாழக்கிழமை ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இக் குழந்தையின் மார்பிலே பிறப்பிலேயே ஸ்ரீவத்ஸத்தின் புனித குறி விளங்கியதால், இந்தக் குறியின் காரணமாக இது ஸ்ரீமன் நாராயணனின் சங்கின் அம்சமாக இருக்குமோ என வியந்து பெற்றோர்கள் இக்குழந்தைக்கு ஸ்ரீவத்ஸாங்கன் என்றும் திருமறு மார்பன் என்றும் ஸ்ரீவத்ஸ சின்ஹர் என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்தனர். பிற்காலத்தில் அர்ச்சாவதாரத்தில் ஏனைய ஆழ்வார்களைப் போல ஈடுபாடு உள்ளது கண்டு, இவரை எல்லோரும் ஆழ்வான் என அழைக்கலாயினர். காஞ்சியில் புண்ணிய கோடி விமானத்தில் வீற்றிருக்கும் வரதராஜப் பெருமாள் திருநக்ஷத்திரமும் ஹஸ்தமேயாகும்.

இவருக்கு ஆழ்வான் என்று பெயர் வந்ததற்குக் காரணம் பற்றி வேறொரு குறிப்பும் காணப்படுகின்றது.

பின்னர் ராமானுஜரிடம் சிஷ்யராக திருவடி பற்றிய பிறகு அவரது புத்தி கூர்மையை அடிக்கடி வியந்தவர் ராமானுஜர். அதிலும் திருவாய் மொழிக்கு பொருள் மிகவும் உருக்கமாக கூறுவார் என்பது பிரசித்தம். ஒருமுறை ராமானுஜருக்கு அதை கேட்பதற்கு மிகவும் விருப்பம் ஏற்பட்டது. ஆனால் சிஷ்யன் குருவுக்கு முன் காலச்சேபம் செய்வதை ஆழ்வான் விரும்பமாட்டார் என்று அறிந்து, தன் மடத்திலுள்ள முதலியாண்டான் மற்றும் உள்ள சிஷ்யர்களை அழைத்து நீங்கள் ஆழ்வானிடம் சென்று திருவாய் மொழி காலட்சேபம் கேட்டு, அதை தன்னிடம் வந்து கூறும்படி ஏற்பாடு செய்தார். அவ்வாறே ஆழ்வானும் ஆரம்பித்து முதல் பாசுரமான உயர்வற உயர்நலம் உடையவன் எவனெவன் என்ற பாசுரத்திற்கு அர்த்தம் கூறும்போது, அதன் உள் அர்த்தத்தை நினைத்து வியந்து மயக்கமானார். உடனே அனைவரும் ஓடிச் சென்று ராமானுஜரிடம் கூறினார்கள். அவரும் அங்கு வந்து அவரை பார்த்து திருவாய் மொழியின் அர்த்தத்தில் ஆழ்ந்துபோய் மயங்கிய அவரை பார்த்து, ஆழ்வான், ஆழ்வான் என்று தட்டி எழுப்பினார். அது முதல் இவருக்கு ஆழ்வான் என்ற பெயர் நிலைத்தது என்று கூறுவர்.

ஆழ்வானின் தாயார் அவரது சிறுவயதிலேயே காலமாகி விட்டார். அவரது தந்தையார் கூரத்தாழ்வார் மறுமணம் செய்து கொள்ள மிகவும் யோசித்தார். (கூரத்தாழ்வானின் தந்தையை கூரத்தாழ்வார் என்று கூறுவார்கள்) தன்மகன் ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷியங்கள் கொண்டு மிகவும் அறிவாளியாக இருப்பது கண்டு, ஒருகால் தான் மறுமணம் செய்து கொண்டுவிட்டால் அவர் மகன் மாற்றாந்தாய்க்கு அடிமைப்பட்டு,

மாற்றுத்தாய் கொடுமைகளுக்கு ஆட்பட வேண்டி வந்து, அதனால் அவனது வளர்ச்சி கெடுமோ என அஞ்சி, மறுமணம் செய்வதையே தவிர்த்தார் என்று கூறப் பட்டுள்ளது.

ஆழ்வான், அறிவிற்சிறந்தவராகவும், பொறுமையும், சாந்த குணமும், நற்பண்புகள் கொண்டவராகவும் இருந்ததால் கூர மாநகரத்திற்கு அரசராக நாட்டைச் சீரும் சிறப்புமாக ஆண்டு வந்தார். அவ்வூரிலேயே உள்ள ஆண்டான் என்ற மாதர்குல விளக்கை மணந்து கொண்டு சிறப்பாக இல்லற தர்மத்தை ஆற்றி வந்தார்.

மிகவும் செல்வந்தரான ஆழ்வானின் அரண்மனையில் ஏழைகளுக்கும், வந்தவர்கள் அனைவருக்கும் இல்லை என்று கூறாமல் பகல், இரவு இருவேளையும் அன்னதானம் சிறப்பாக நடந்து வந்தது. இரவு அனைவரும் உண்ட பிறகே ஆழ்வான் ஆண்டவனைத் தியானம் செய்த பிறகே, தான் உணவு உட்கொள்வார். ஆழ்வான் பெரும் பணக்காரர் ஆனதால் அவரது அரண்மனையின் கதவுகளில் பெரிய வெண்கல மணிகள் பொறுத்தப் பட்டிருக்கும். ஆழ்வான் அமுது உண்ட பிறகு அந்த அரண்மனைக் கதவுகள் மூடப்படும். ஆயினும் ஆழ்வான் காஞ்சி வரதர் அமுது உண்ட பிறகு அவரது கோவில் கதவுகள் சாத்தப்படும்போது ஏற்படும் மணி சப்தம் காற்றில் மிதந்து வருவதைக் கேட்டபிறகே, பெருமாள் அமுது உண்டு விட்டார். இனி தாமும் உண்ணலாம் என்ற திருப்தியில் உண்ணுவார். காஞ்சி பெருமாள் கோவில் கதவுகளில் பொறுத்தப்பட்ட மணிகளோ சிறிய வெண்கல மணிகள்.

ஒருநாள், காற்றின் திசை மாறியதாலோ அல்லது வேறு சப்தங்களினாலோ கேட்ட மணி ஒலியினால்

ஆழ்வான், அருளாளன் உணவு அருந்தி விட்டார்எனத் தவறாக் நினைத்துக் தானும் உணவு அருந்தியதால் அவரது அரண்மனை கதவுகள் சாத்தப்பட்டன. இந்த இனிமை யான சப்தம் காஞ்சியில் வரதரது காதில் வீழ்ந்தது. தினமும் உணவு அருந்துவதற்கு முன்பு வரதராஜர் தனது சிஷ்யராகிய திருக்கச்சி நம்பியுடன் உலக விஷயங்களைப் பற்றிப்பேசுவது வழக்கம். திருக்கச்சி நம்பி ஒருவரே ஆண்டவருடன் பேசும் சக்தி படைத்தவர். அவர் அவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போது ஆழ்வானின் அரண்மனைக் கதவுகள் மூடப்படும் சப்தம் கேட்டது. இதைக் கேட்ட பெருமாள், நம்பியிடம் இதுவரைக் கேட்காத ஓர் இனிய சப்தம் எங்கிருந்து வருகிறது என்று வினவினார். திடுக்கிட்ட நம்பியவர்கள், ஆண்டவனே அபசாரம் நேர்ந்து விட்டது. பக்கத்தில் கூரத்தில் ஆழ்வான் என்ற உங்களது பரம பக்தன் இருக்கிறார். அந்த ஊரின் அரசர், தேவரீர் உண்டபின், தங்களது கோவில் கதவுகள் சாத்தப்படும் ஒலிகேட்ட பிறகே தான் உண்டு, பின் தன் கதவுகளைச் சாத்துவார். இன்று என்னவோ தெரியவில்லை. அவர் உண்டபின் கதவுகள் சாத்தப்படுவதால் அக்கதவுகளில் பொறுத்தப் பட்ட பெரிய மணிகளின் சத்தமே இத்துணை இனிமை யாகக் கேட்கிறது. ஆழ்வானும் அரசு வேலைகளில் முழுமையாகத் தன்னை ஈடுபடுத்தியபடியால், நேரமின்மையால் தாங்களை இதுவரைத் தரிசிக்க சந்தர்ப்பம் வரவில்லை என்றார்.

இதைக் கேட்ட தேவாதிராஜன் வாயிற் கதவுகளுக்கு இவ்வளவு பெரிய மணிகள் கட்டி வாழும் அளவிற்கு எனக்கு ஒரு பக்தன் இருக்கிறானா? என்று வியந்தார். ஆழ்வானின் செல்வமோ என்னை இவ்வாறு மயங்க வைத்தது என்று கூறி வியந்து மகிழ்ந்தார்.

மறுநாள் திருக்கச்சி நம்பிகள் மூலம் இச்செய்தியினைக் கேட்ட ஆழ்வான் ஐயோ, பெருமாளிடம் மிகவும் அபசாரப்பட்டப் போனேனே, என் செய்வது? செல்வத்திற்க அதிபதியான அருளாளப் பெருமாள் வாயில் என்னைச் செல்வந்தன் எனக் கூறிய பின் நான் எந்த முகத்துடன் அவர் முகத்தில் விழிப்பேன். ஆகவே எனக்கு இந்தச் செல்வங்கள் எதுவும் வேண்டாம் எனக் கூறி, தன் செல்வங்களை எல்லாம் ஏழை எளியவர்களுக்கும் ஊர் மக்களுக்கும் தானமாக வழங்கி விட்டு, அந்த ஊரை விட்டு விட்டு செல்லத் திட்டமிட்டார். அவ்வாறே செய்தபின் தன் மனைவியை அழைத்துக் கொண்டு பின் தொடருமாறு கூறி ராமானுஜருக்கு சிஷ்யனாக சேர புறப்பட்டார்.

அப்போது ஓரிடத்தில் அடர்ந்த காட்டைக் கடக்கையில் அவரது மனைவி பயமாக இருக்கிறது ஸ்வாமி என்று கூறினார். அதற்கு அவர் மடியில் கனம் இருந்தால்தானே வழியில் பயம் ஏற்படும். ஆனவே மடியில் என்ன வைத்திருக்கிறாய் என்று கேட்டார். அதற்கு அவர் மனைவி ஸ்வாமி, தாங்கள் வழியிலேயே சந்தியா வந்தனம் முதலிய நித்தியானுஷ்டானங்கள் செய்வதற்காக ஒரே ஒரு பொன் வட்டில் மட்டும் மடியில் வைத்திருக்கிறேன். வேறு ஒன்றும் இல்லை என்றார். உடனே ஆழ்வான் அதை வாங்கி அருகில் உள்ள புதர்களிடையே வீசி எறிந்து விட்டு நடக்க ஆரம்பித்தார். சிறிது நேரம் கடந்ததும் இப்பொழுது பயமாக இருக்கிறதா என்று கேட்க அவர் மனைவியும் பயப்படுவதற்கு என்னிடம் என்ன இருக்கிறது என்று கூறி அவரைப் பின் பற்றி நடந்தார். இந்த நிகழ்ச்சியைத் தான் ஆழ்வான் சன்னிதிகளில் வாழி திருநாமம் கூறும்போது **பொன் வட்டில் தனை எறிந்த புகழுடையோன் வாழியே!,** என்று வாழ்த்துகிறார்கள்.

கூரத்தாழ்வான் காஞ்சி வந்து ராமானுஜரை சந்தித்து அவரது திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கித் தன்னைச் சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார். ராமானுஜரும் மனமுகந்து அவரைச் சிஷ்யராக ஏற்றுக் கொண்டார். அன்று ஏற்பட்ட குரு சிஷ்ய உறவு உலகத்திற்கே ஒரு எடுத்துக் காட்டாகவும் வைணவச் சம்பிரதாயத்திற்கே ஒரு கலங்கரை விளக்காகவும் சுடர்விட்டு இன்றளவும் பிரகாசித்து வருகிறது.

## ராமானுஜரின் குருக்கள்

இதுவரை கூரத்திற்கே அரசராக இருந்து தரும சிந்தனை உடையவராக தினம் பலருக்கும் அன்னதானம் செய்து வாழ்ந்து வந்த கூரேசர் என்று அழைக்கப்பட்ட ஆழ்வான், தேவப் பெருமாள் தன்னை பெரும் செல்வன் என்று கூறியதை திருக்கச்சி நம்பி மூலம் கேள்விபட்டு தான் பெருமானிடம் அபசாரப்பட்டதாக நினைத்து, தனது அரசு பதவி மற்றும் தன் எல்லா செல்வங்களையும் மக்களுக்கு தானம் செய்துவிட்டு செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு, குலச் செருக்கு ஆகியவை ஒரு சிறிதும் இல்லாத கூரத்தாழ்வான் ராமானுஜரது திருவடிகளே சரணம் என்று அவரை வந்து அடைந்த கதையை பார்த்தோம். இனி அவர் தன் குருவாகிய ராமானுஜரின் வலது கையாகி விளங்கி, அவரோடு சேர்ந்து நமது ஸ்ரீவைஷ்ணவ சமுதாயத்திற்கு ஆற்றிய தொண்டுகளைப் பார்ப்போம். இனி மறுபடியும் ராமானுஜரின் கதைக்கே வருவோம். ராமானுஜர் ஸ்ரீரங்கம் வந்து அரங்கனது ஆசி பெற்று நாச்சியார் சன்னதிக்கு வெளியே தனது மடத்தை அமைத்துக் கொண்டு அரங்கனுக்கு கைங்கர்யங்கள் செய்துகொண்டு வருவதை பார்த்தோம். ராமானுஜருக்கு த்வயம், திருமந்திரார்த்தங்கள் முதலியவற்யை உபதேசம் செய்த பெரிய நம்பிகள் ராமானுஜரை திருக்கோட்டியூர்

நம்பிகளிடம் சென்று சரம ஸ்லோகத்தை உபதேசம் பெற்று வரும்படி கூறினார். ராமானுஜரும் திருக்கோட்டியூர் சென்று நம்பிகளிடம் தண்டம் சமர்ப்பித்து சரம ஸ்லோக உபதேசம் செய்து அருளும்படி வேண்டிக் கொண்டார். நம்பிகள் ராமானுஜர் அந்த உபதேசம் பெற தகுதியுள்ளவரா என்று நன்கு சோதிக்க விரும்பினார். இன்று போய் மறுபடியும் வரப் பணித்தார். இவ்வாறு 17 முறை அவரை திருப்பி அனுப்பினார். அவரது மன உறுதியை கண்டு மனமகிழ்ந்த நம்பிகள் 18ம் முறை தண்ட, பவித்திரங்களுடன் வரும்படி கூறினார். அதன்படியே 18ம் முறை ராமானுஜர், முதலையாண்டான், கூரத்தாழ்வான் ஆகியயோருடன் அங்கு சென்று நம்பிகளை தண்டனிட்டு நின்றார். ராமானுஜருடன் இருவர் வந்திருப்பதை கண்ட நம்பிகள், நான் உங்களை தனியாகத்தானே வரச் சொன்னேன். நீங்கள் இருவருடன் வந்தது ஏன் என்று கேட்டார். அதற்கு ராமானுஜர், என்னை தண்டம், பவித்திரங்களுடன் வரச் சொன்னீர்கள். அதன்படி தான் வந்திருக்கிறேன். முதலையாண்டானே என் தண்டம். ஆழ்வான் எனது பவித்திரம் போன்றவர்கள். ஆகவே நீங்கள் கூறியபடி தண்டம், பவித்திரங்களுடன் தான் வந்திருக்கிறேன் என்று பணிவுடன் கூறினார். நம்பிகளும் அவரது சாதுர்யமான பதிலைக் கேட்டு மகிழ்ந்து ராமானுஜருக்கு மட்டும் ரகஸ்யார்த்தங்களை உபதேசித்தார். இவற்றை ராமானுஜர் ஊர் திரும்பியதும் மற்ற இருவருக்கும் உபதேசம் செய்தார்.

பிறகு தனக்கு சரம ஸ்லோக உபதேசம் செய்யும் நம்பியவர்களை பிராத்தித்துக் கொண்டார். அதற்கு நம்பிகள் மறுமுறை வரும்படி கூறினார். அவரும்

அவ்வாறே போக நம்பிகள் ராமானுஜருக்கு சரம ஸ்லோகத்தை உபதேசம் செய்து முதலையாண்டானுக்கும் ஆழ்வானுக்கும் ஒரு வருடம் கழித்து உபதேசம் செய்யும்படி கூறினார். ஏனென்றால் நன்கு பரீட்சை செய்யாமல் உடனே யாருக்காவது நீ உபதேசம் செய்தால் நீ நரகத்திற்கு போவாய் என்று கூறினார். வெளியே வந்ததும் ராமானுஜர் யோசனை செய்தார். இந்த ஸ்ரம ஸ்லோக உபதேசம் பெற்றதால் தான் ஒருவனே சுவர்கம் போவான். ஆனால் ஊரறிய அனைவருக்கும் உபதேசம் செய்தால் அனைவருமே சுவர்கம் போவார்கள் அல்லவா ? நான் ஒருவன் நரகத்திற்கு போனாலும் பரவாயில்லை . இந்த ஊரில் உள்ளவர்கள் அனைவரும் சுவர்கம் செல்வது தான் நல்லது என்ற முடிவுக்கு வந்து அந்த ஊரில் உள்ள கோவில் கோபுரத்தின் மீது ஏறி அனைவரையும் அழைத்து சுவர்கம் செல்ல உதவும், இந்த மந்திரத்தை அனைவருக்கும் உபதேசித்தார். இது கேட்ட நம்பிகள் ராமானுஜரை அழைத்து காரணம் கேட்க, அவர் நான் ஒருவன் சுவர்கம் செல்லுவதற்கு பதில் இந்த ஊர் ஜனங்கள் எல்லாரும் சுவர்கம் போவது நல்லது தானே. அதற்காக நான் நரகம் போகவும் தயாராக இருக்கிறேன் என்று கூறினார். இந்த சமாதானத்தை கேட்ட நம்பிகளும் மகிழ்ச்சி அடைந்தார். இந்த நிகழ்ச்சிக்கு "எம்பெருமான் தரிசனம்" என்று பெயர்.

ஊர் திரும்பியதும் கூரத்தாழ்வான் வருத்தத்துடன் ராமானுஜரிடம், நம்பிகள் சரம ஸ்லோக உபதேசத்தை எனக்கு ஒரு வருஷம் கழித்து உபதேசம் செய்யும்படி கூறியுள்ளார். இந்த தேகம் அநித்யம். இன்றிருப்பார் நாளை இருப்பது நிச்சயமில்லை. சாஸ்திரங்களை இதற்கு ஒரு வழி கூறியுள்ளது. ஒரு மாதம் உபவாசம்

இருந்து குருவுக்கு சேவை செய்தால் அது ஒரு வருஷத்திற்கு சமம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகவே நான் இன்று முதல் ஒரு மாதம் உபவாசம் இருந்து உங்களுக்கு சேவை செய்கிறேன். அது முடிந்ததும் எனக்கு அந்த உபதேசங்களை செய்து அருள வேண்டும் என்று கூறுகிறார். ராமானுஜரும் சிஷ்யனின் ஆர்வத்தையும் மன உறுதியையும் கண்டு மகிழ்ந்து அவ்வாறே ஒரு மாதம் கழித்து உபதேசம் செய்து அருளினார்.

## ராமானுஜர் அன்பாலும் வாதத் திறமையாலும் பலர் சிஷ்யராதல்

ராமானுஜரின் புகழ் நாளுக்கு நாள் பரவி வரவே அவருக்கு சிஷ்யர்களும் அதிகரித்துக் கொண்டு வரலாயினர். அவரது காலட்சேபங்களுக்கு நூற்றுக் கணக்கான மக்கள் வர ஆரம்பித்தார்கள். இதன் காரணமாக அவர் மீது பொறாமை கொண்ட சிலர் அவரை கொலை செய்ய திட்டமிட்டனர். தினமும் அவருக்கு அன்னம் பரிமாறும் அம்மையாரிடம் மிரட்டி தாங்கள் சொல்லும் திட்டத்திற்கு உடன்பட வைத்தனர். அந்த அம்மையாரும் முதலில் மறுத்த போதிலும் அவர்களது மிரட்டலுக்கு பயந்து ஒத்துக் கொள்கிறாள். அவர்கள் கொடுத்த விஷத்தை அவரது அன்னத்தில் கலந்து பரிமாற ஒத்துக் கொள்கிறாள். ஆனால் அவருக்கோ மனம் ஒப்பவில்லை. பரிமாறும் கைகள் நடுங்குகிறது. முகத்தில் மெல்லியதாய் வியர்வை, மிரளும் கண்கள், எப்பொழுதும் சிரித்தபடி பேசிக் கொண்டே பரிமாறும் அவள் மௌனமாக பரிமாறுகிறாள். ராமானுஜரோ இதை எல்லாம் கவனித்து அவள் ஏதோ தவறு செய்கிறாள் என்று குறிப்பால் உணர்ந்து, அந்த உணவை காவிரி ஆற்றில் எறிந்து விடுகிறார். அந்த

உணவை உண்ட மீன்கள் இறப்பதை கண்டு தன்னை யாரோ கொல்ல சதி செய்கிறார்கள் என்று உணர்ந்து வருந்துகிறார். தான் ஏதோ தவறு செய்வதாக எண்ணி 3 நாட்கள் சாப்பிடாமல் உபவாசம் இருந்து வரலானார்.

இதை கேள்விப்பட்ட அவரது குரு திருக்கோட்டியூர் நம்பி அவர்கள் அவரை காண வேகமாக வருகிறார். தன் குரு வருவதை தெரிந்த ராமானுஜர் அவரை எதிர் கொள்ள செல்கிறார். இருவரும் பட்ட பகல் வேளையில் காவிரியின் சுடு மணலில் சந்திக்கிறார்கள். தன் சிஷ்யர்களோடு ராமானுஜர் தன் குருவை கண்டதும் சேவிக்கிறார். நமது சம்பிரதாயப்படி யதிகளை (சன்யாசிகளை) சேவிக்கும் போதும், அவர் போதும் என்று கூறும் வரை சேவித்துக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வாறு ராமானுஜர் சேவித்துக் கொண்டிருக்கும்போது வெய்யிலாலும், காவிரியின் சுடு மணலாலும், உபவாசத்தின் களைப்பாலும் ராமானுஜரின் உடல் சிவந்து வியர்வை ஒழுக சேவித்துக் கொண்டே இருக்கிறார். நம்பிகளும் போதும் என்று சொல்லவில்லை. அங்கிருந்த சிஷ்யர்கள் யாரும் வாய் திறக்கவில்லை. இதைக் கண்டு பொறுக்காத ராமானுஜருடைய சிஷ்யர்களுள் ஒருவரான கிடாம்பி ஆசான் என்பவர் நம்பியவர்களைப் பார்த்து ஸ்வாமி உங்களுக்கு மனதே இல்லையா? உடல் சிவக்க வியர்வை வழிய சேவிக்கும் இவரை போதும் என்று சொல்ல மாட்டீர்களா? என்று மனம் பதைக்க கேட்டு விடுகிறார். இதைக் கண்ட நம்பிகள் அவரை அருகில் அழைத்து உன்னைப் போல் ஒருவனைக் கண்டுபிடிக்க தான் இந்த பரீட்சை வைத்தேன். நீ தான் ராமானுஜரை கவனிக்க சரியான ஆள். ராமானுஜர் படும் அவஸ்தையை கண்டு பொறுக்க மாட்டாத நீ தான் அவரை நன்கு காக்க

சரியான ஆள். இனி நீர் மடைப்பள்ளி கைங்கர்யத்தை கவனித்து ராமானுஜருக்கு அன்னமிடல் முதல் அவரை நிழல்போல் காக்க வேண்டும். அவருக்கு அன்னத்தில் விஷம் இட்ட செய்தி கேட்டே அதை தடுக்கவே நான் வந்தேன். சரியான ஆளை கண்டுபிடித்து விட்டேன். நீ தான் அதற்கு சரி என்று கூறி ஆசீர்வதித்தார்.

ஆழ்வான் ஸ்ரீரங்கத்தில் ராமானுஜருக்குச் சேவை செய்து வரும்போது அதே ஸ்ரீரங்கத்தில் அமுதனார் என்ற ஒரு பரம பக்தர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு நாள் ராமானுஜரை அணுகி, தனக்கு சிறந்த குருவைக் காட்டிக் கொடுக்கும்படி வேண்டினார். அவரும் திருவரங்கத் தமுதனாரை கூரத்தாழ்வானிடம் அனுப்பி சிஷ்யானாக ஏற்கும்படி பணித்தார். ஆழ்வானும் ஏற்றுக் கொண்டார். அப்பொழுது அமுதனாரின் தாயார் ஆச்சாரியன் திருவடிகளை அடைந்தார். அமுதனார் ராமானுஜரை அணுகி தாயாரின் கைங்கரியத்திற்கு ஏகாஹத்திற்கு நிமிந்த்ரண ஸ்வாமியாக ஒருவரை நியமிக்குமாறு வேண்டினார். அவரும் ஆழ்வானையே போகும்படி கூறினார். ஆழ்வானும் தன் குருவின் குறிப்பறிந்து, முகம் சுளிக்காமல் எழுந்தருளினார். அமுதனாரும் தன் குருவே வருவது கண்டு மகிழ்வுடன் வரவேற்று அமுது செய்வித்தார். அமுது செய்து முடிந்ததும், ஆழ்வானைப் பார்த்து அமுதனார் ஸகலமும் ஸம்பூர்ணமா? என வினவிய போது அவர்தன் குரு ராமானுஜரின் மனதில் உள்ள குறிப்பறிந்து "இல்லை" என்றார். திடுக்கிட்ட அமுதனாரும் என்ன காரணம் என்று கேட்டார். ஆழ்வானும், அரங்கனின் கோவில் நிர்வாக அதிகாரியாக இருந்த அமுதனாரிடம் கோவில் சாவிகளைத் தன்னிடம் அளித்தால் தான் சம்பூர்ணம் என்று கூறினார்.

அமுதனாரும் மறுபேச்சு பேசாமல் சாவியைத் கொடுத்தார். அக்காலத்தில் அரங்கன் கோவில் நிர்வாகம் மிகவும் சீர்குலைந்து விதிகளைமீறியதாக இருந்தது. ஆழ்வானும் நேராகத் தன் குரு ராமானுஜரின் திருவடிகளில் அந்த சாவியைச் சமர்ப்பித்து அரங்கனின் கோவில் நிர்வாகத்தைச் சீர் செய்ய வழி வகுத்தார். "ராமானுஜ திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று கடல் சூழ்ந்த மண்ணுலக முற்றும் போற்றும்படி எம்பெருமானார் அரங்கன் சன்னிதி கைங்கர்யங்களை ஏற்றுக் கொண்டார் என்பது பிரசித்தம். அதையே "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தினாய் வாழியே" என்று கூறி வழி வகுத்தவர் ஆழ்வான்.

ஆழ்வானின் மற்ற சிஷ்யர்களின் பிரதானமானவர் பிள்ளை பிள்ளை ஆழ்வான் என்பவர். இவர் நற்குலத்தில் பிறந்தவர். நல்ல செல்வம் உடையவர். இத்துணை நல்ல குணம் பெற்றிருந்த போதும் முன் கோபம் காரணமாக அஹங்காரம் கொண்டு அடிக்கடி பாகவதர்களிடையே அபசாரப்பட்டுக் கொண்டிருந்தார். ஒருவன் எவ்வளவு நல்ல காரியம் செய்த போதும் பாகவத அபசாரப்பட்டால் அவனுக்கு பெருமாள் மோட்சம் அளிக்கமாட்டார் என்பது உறுதி. இதைக் கண்ட ஆழ்வானும் இவ்வளவு நல்ல சிஷ்யனுக்கு மோட்சம் கிடைக்காதே என்று கருதி ஒரு வழி செய்தார். ஒரு புண்ணிய தினத்தன்று நீராடிய பின் அவரை அழைத்து, பிள்ளை பிள்ளை ஆழ்வானே, புண்ணிய தினத்தன்று ஏதாவது தானம் செய்தால் விசேஷம் என்று கூறுவார்கள். அவ்வாறே நீங்கள் எனக்கொரு தானம் தர வேண்டும் என்று கேட்டார். அதற்கு அவர் என்னிடம் இருப்பதெல்லாம் குருவாகிய தங்களுடையதாக இருக்க எதைத்தான் தானம் செய்வது

என்று கேட்டார். அவர் அதற்கு நீங்கள் மணம், மொழி, மெய் என்ற முக்காரணங்களால் பாகவத அபசாரப்பட மாட்டேன் என்று வாக்கு கொடுக்க வேண்டும் அன்று கேட்டார். அவரும் அவ்வாறே தத்தம் செய்து கொடுத்தார்.

பின்பு ஒரு நாள் பழைய தோஷ பழக்கத்தால், கொடுத்த வாக்கை மறந்து ஒரு பாகவதரிடம் கோபப்பட நேர்ந்தது. உடனே வருந்திய அவர் குருவுக்கு கொடுத்த வாக்கை மீறியதற்கு வருந்தி வெட்கப்பட்டு சில காலம் தன் திருமாளிகையிலேயே அடைபட்டுக் கிடந்தார். சில காலமாக சிஷ்யனைக் காணாத ஆழ்வான் என்ன ஆயிற்று என்று அறிய அவரது திருமாளிகைக்கு தானே சென்று பார்த்தார். குருவே தன்னை தேடி வருவதைப் பார்த்த பிள்ளை பிள்ளை ஆழ்வான் அவரது திருப்பாதங்களில் வீழ்ந்து தான் கொடுத்த வாக்கை மீறியதை கண்ணீருடன் கூறினார். ஆழ்வானுடன் அவரிடம் எப்பொழுது ஒருவன் செய்த தவறை உணர்ந்து வருந்துகிறானோ, அப்பொழுதே அவன் இறைவனால் மன்னிக்கப் படுகிறவன். ஆகவே தங்களுக்கு பாகவத அபசாரம் நேராது. இனியும் இவ்வாறு நேராதபடி நடந்து கொண்டு, பெருமாளின் திருவடி அடைய வழி தேடுவீர் என்று உபதேசித்து அருளிச் செய்தார்.

ஆழ்வார் புறச் சமயத்தவர்களோடு வாதம் செய்து ஜெயிப்பதில் வல்லர். அவர் சிறுவனாக இருந்தபோது ஒரு சமயம் வெளியே சென்றிருக்கும் போது ஒரு புற சமயவாதியின் பேச்சைக் கேட்டு வீட்டிற்கு நேரம் கழித்துத் திரும்பினார். புற சமய வாதத்தைக் கேட்ட பாவத்தைப் போக்க அவரது தந்தையார் பிராயச்சித்தமாக 3 நாள்கள் உபவாசம் இருந்த பிறகே வீட்டிற்குள் நுழையுமாறு தண்டனை கொடுத்தார். ஆழ்வானும்

தந்தை சொல் தட்டாது மறுபேச்சு பேசாமல் அதை நிறைவேற்றிய பிறகே வீட்டிற்குள் நுழைந்தார்.

ஒரு சமயம் ஸ்ரீரங்கத்தில் யக்ய மூர்த்தி என்ற அத்வைத பண்டிதர் ராமானுஜரை வாதத்திற்கு அழைத்தார். அவரும் ராமானுஜரும் சளைக்காமல் 17 நாட்கள் இடைவிடாமல் வாதம் செய்தனர். மிகவும் மன வருத்தத்துடன் தேவராஜ பெருமாளை வேண்டினார். ஒரு கால் தான் தோற்றுப் போய் விட்டால் ஸ்ரீவைஷ்ண சமுதாயத்திற்கே இழுக்கு ஏற்பட்டு அது அழிந்து விடும் நிலைக்கு தள்ளப்பட்டு விடும். தன்னால் இந்த கதி ஏற்பட்டு விடக் கூடாது என வருந்தி இந்த வாதத்தில் தான் ஜெயிக்க வேண்டுமாறு உள்ளம் உருக வேண்டினார். பெருமாளும் அவர் பேச வேண்டிய விஷயங்களை எடுத்துரைத்து ஆசீர்வாதம் செய்தார். மறுநாள் ராமானுஜர் புதுப்பொலிவோடு சென்று யக்ஞமூர்த்தியை ஜெயித்தார். அவரும் ராமானுஜரின் மேதாவிலாசத்தை புகழ்ந்து தன்னை அவருடைய சிஷ்யராக சேர்த்துக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டார். அவரும் அதை அங்கீகரித்து அவருக்கு ஒரு புது பெயர் சூட்ட விரும்பினார். அவருக்கு ஜெயிக்க தனக்கு வழிகாட்டிய காஞ்சி அருளாளப் பெருமாள் பெயரையும் தன் பெயரையும் சேர்த்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று பெயர் சூட்டினார். அவரது சிலை இன்றும் காஞ்சி திருவெஃகா என்ற சொன்ன வண்ணம் செய்த பெருமாள் யதோத்காரி பெருமாள் கோவிலிலும், ஸ்ரீ பெருபூதுர் கோவிலும் உள்ளது. ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை கொடுக்கும் ராமானுஜர் இவருக்கு தனது திருவாராதனை பெருமாளை கொடுத்து தினம் தவறாது திருவாராதனை செய்யும் உயர்ந்த கைங்கர்யத்தை கொடுத்து பெருமை செய்தார்.

## ராமானுஜரின் உத்தரவின்பேரில் திருமலையில் நந்தவனம் அமைத்தல்

ஒருநாள் ராமானுஜர் காலட்சேபம் செய்யும்போது திருமலையில் ஸ்ரீனிவாசருக்கு பூஜை செய்ய போதிய புஷ்பங்கள் கிடைக்காத செய்தி வந்ததை நினைத்து அவர்களை பார்த்து இங்குள்ளோரில் யாராவது திருமலை வாஸனுக்கு அங்கு சென்று தங்கி புஷ்ப கைங்கர்யம் செய்ய முன்வருவீர்களா என்று கேட்டார். யாரும் பதிலே பேசவில்லை. அந்த காலத்தில் திருமலை செல்வதே கடினம். எந்த ஒரு வசதியும் இல்லாத திருமலையில் பூந்தோட்டம் அமைத்து திருமலையானுக்கு புஷ்ப கைங்கர்யம் செய்வது என்பது சாமான்ய காரியமில்லை. ஆகவேதான் யாரும் முன்வரவில்லை. திருமலையினை புஷ்ப மண்டபம் என்றும், காஞ்சீபுரத்தை யோக மண்டபம் என்றும், ஸ்ரீ ரங்கத்தை போக மண்டபம் என்றும், மேல் கோட்டையை ஞான மண்டபம் என்றும் கூறுவார்கள். அத்தகைய புஷ்ப மண்டபத்தில் சேவை செய்ய அனந்தாழ்வான் என்பவர் முன்வந்தார். ராமானுஜரும் அவரை ஆசீர்வாதம் செய்து அனுப்பி வைத்தார். அவரும் கர்ப்பிணியான அவரது மனைவியை யும் அழைத்துக் கொண்டு திருமலை புறப்பட்டார்.

முதலில் அவர் அங்கு ஒரு பூந்தோட்டம் அமைக்க இடம் தேர்ந்தெடுத்து வேலையை ஆரம்பித்தார். தான், மண்வெட்டியில் மண்ணை வெட்டி எடுத்து ஒரு கூடையில் போட, அதை அவர் மனைவி, தலையில் சுமந்து சற்று தூரம் உள்ள ஒரு பள்ளத்தில் கொட்டி வர

வேண்டும். அவரோ நிறைமாத கர்ப்பிணி. தலையில் மண்ணை சுமந்தபடி மெதுவாக சென்று கொட்டி வருவார். இதை அங்கிருந்த ஒரு சிறுவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அனந்தாழ்வானிடம் சென்று நான் உமக்கு உதவட்டுமா என்று கேட்க, அதற்கு அவர் இது தெய்வீக காரியம். இதை நானும் என் மனைவியுமே செய்ய விரும்புகிறோம். ஆகவே நீ போ என்று கூறினார். பிறகு அந்த பையன் அந்த பெண்மணியிடம் சென்று நான் உதவட்டுமா எனக் கேட்டான். முதலில் அவள் மறுத்தாள். பிறகு அந்த பையனின் வற்புறுத்தலால், தன்னால் இயலாமை காரணமாக ஒத்துக் கொள்கிறார். ஆனால் கணவர் கோபிப்பார் என்று பயம் வேறு. ஆகவே அந்த பையன் கூறிய படி முதலில் அவள் சென்று கூடையை வாங்கி வந்து சற்று தூரத்தில் மறைவில் நின்றிருக்கும் அந்த பையனிடம் கொடுக்க, அவன் வேகமாகச் சென்று தூரத்தில் அதை கொட்டி வந்தான். முதலில் மெதுவாக நடந்து வந்த வேலை இப்பொழுது வேகமாக நடைபெறுவது கண்டு சந்தேகப்பட்ட அனந்தாழ்வான் அந்தப் பையனை பின் தொடர்ந்து சென்று பார்த்தார். நடப்பதைக் கண்ட அவர் அந்தப் பையன் பேரில் கோபம் கொண்டு அவனை அடிக்க தன் கையில் உள்ள கடப்பாறையுடன் பின் தொடர்ந்து ஓடினார். அந்தப் பையன் கோவிலை நோக்கி ஓடி கர்பக்கிருஹத்தில் நுழைய முயன்றான். அவரும் தன் கையில் உள்ள கடப்பாறையை அந்தச் சிறுவனை நோக்கி வீச அது அந்தச் சிறுவனின் முகவாய் கட்டையை தாக்கியது. அதிலிருந்து ரத்தம் பெருகி ஓடியது. இதற்குள் அந்தச் சிறுவன் ஓடி மறைந்து விட்டான். அவனை தேடியபடி அவர் கோவிலுக்குள் கர்பகிருஹத்திற்குள் சென்று பார்த்தபோது அவருக்கு ஓர் பேரதிர்ச்சி

காத்திருந்தது. திருவேங்கடத்தானின் முகவாய் கட்டையில் சிறுவனுக்கு அடிபட்ட அதே இடத்திலிருந்து ரத்தம் பெருகி ஓடிக் கொண்டிருந்தது. அலறித் துடித்தார். பெருமானே பெரிய அபசாரம் செய்து விட்டேன். வந்தது நீ என்று அறியாமல் உலகத்தையே ரக்ஷிக்கிற தெய்வத்தையே அடித்து விட்டேனே என்று அலறியபடி அருகில் இருந்த பச்சை கற்பூரத்தை எடுத்து முகவாய் கட்டையில் வைத்து அழுத்தி ரத்தத்தை நிறுத்தினார். உடனே அவரும் திருமலைவாசனின் பாதாரவிந்த கமலங்களில் பலமுறை வீழ்ந்து சேவித்து அதைப் பற்றிக் கொண்டு செய்த அபசாரத்தை பொறுக்குமாறு வேண்டி அழுதார். ஏழுமலை கொண்ட ஸ்ரீனிவாசரும் அவருக்கும் அவர் மனைவிக்கும் காட்சி கொடுத்து ஆசீர்வதித்து அவர் எடுத்துக் கொண்ட காரியம் செவ்வனே முடிய அருள்புரிந்தார். இன்றும் திருமலை கோவிலிலே மஹா துவாரத்திற்கு நுழையும்போது நுழைவாசலில் அங்குள்ள சுவற்றுக்குமேல் அன்று அனந்தாழ்வான் சிறுவன் மீது எறிந்த கடப்பாறையை இன்றும் காணலாம். அதை அங்கே ஆணி அடித்து சுவற்றில் மாட்டியுள்ளனர்.

## ராமானுஜரின் திக்விஜயம்

சில நாட்கள் சென்றதும் (1057 கி.பி.) ராமானுஜர் முதல் திருமலை யாத்திரைக்கு செல்ல புறப்பட்டார். அங்கு சென்றதும் பெரிய திருமலை நம்பிகளையும், அனந்தாழ்வானையும் பார்த்து ஆனந்தமடைந்தார். பிறகு அனந்தாழ்வான் அமைத்த நந்தவனத்தையும் ஏழுமலை வாசன் கழுத்தை அலங்கரிக்க காத்திருக்கும் பாசம் மிகுந்த பூக்களையும் கண்டு பரமானந்தம் கொண்டு அனந்தாழ்வானை ஆசீர்வதித்தார். அவர், பெரிய திருமலை நம்பியிடம் ராமாயண காலட்சேபத்தை

கேட்க விரும்பினார். கீழே வந்து 3 நாட்கள் தங்கி காலட்சேபம் கேட்டார். பெரிய திருமலை நம்பிகளும் தினமும் காலையில் திருமலை ஏறிச் சென்று பகவான் கைங்கர்யங்களை செவ்வனே செய்து மாலை கீழே இறங்கி வந்து காலட்சேபம் நடத்தினார். பெரிய திருமலை நம்பிகளும், வைஷ்ணவ மதத்தைக் கட்டிக் காத்து, அதன் புகழை உலகெங்கும் பரப்ப வந்திருக்கும் ஜகதாச்சாரியனுக்கு தான் ஏதாவது தர விரும்பி ராமானுஜரை ஏதாவது வேண்டும் என்று கேட்கச் சொன்னார். அதற்கு ராமானுஜரும் தான் மனத்திற்குள் தேக்கி வைத்திருந்த ஆசையான தன் தம்பி (சித்தியின் மகன்) கோவிந்த பெருமாளை தனக்கு தரும்படி கேட்டார். அவரும் சந்தோஷத்துடன் சம்மதித்து கோவிந்தனை ராமானுஜருடன் அனுப்பி வைத்தார். ஸ்ரீ ரங்கம் வந்ததும் கோவிந்தன் சில நாட்கள் கழித்து திருமலைக்கே செல்ல விரும்பி இதை ராமானுஜரிடம் கூறினார். அவரும் அவ்வாறே அனுப்பி வைத்தார். திருமலை சென்றதும் பெரிய திருமலை நம்பிகள் புத்திமதி கூறி அவரை மறுபடியும் ஸ்ரீ ரங்கமே அனுப்பி வைத்தார். அதன் பிறகு ராமானுஜர் அவருக்கு காஷாயம் முதலியவற்றை அளித்து அவருக்கு எம்பார் எனப் பெயரிட்டார். எம்பார் என்பது தன் பெயராகிய எம்பெருமானார் என்பதை சுறுக்கி எம்பார் என்று பெயரிட்டார். இவரே ராமானுஜருக்குப் பிறகு அந்த பீடத்தை அலங்கரிக்க போகிறவர்.

பின்பு ராமானுஜர் திக்விஜயத்தை தொடர்ந்தார். முதலில் திருமாலிரும் சோலை வந்தடைந்தார். அங்கு அழகிற் சிறந்த, கண்டவர் மயங்கும் சுந்தர திருஉருவம் கொண்ட அழகர் என்று அழைக்கப்பட்ட கள்ளழகர் அலங்கரிக்கும் திருமாலிரும் சோலை வந்தடைந்தார்.

அவரை கண் குளிர சேவித்து மகிழ்ந்தார். இங்குதான் ராமானுஜர் சூடிக்கொடுத்த சுடர் கொடி, பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் கொடி, அரங்கனை மணம் புரிந்த ஆண்டாள் தன் பாட்டின் மூலம் குறிப்பிடப்பட்ட ஆசையான கள்ளழகருக்கு 100 தடா (அண்டா) சக்கரைப் பொங்கல் 100 தடா வெண்ணை சமர்பிக்க விரும்பின ஆசையை நிறைவேற்றி வைத்தார். ஆண்டாள் ஆசைப்பட்டது போல 100 தடா சர்க்கரை பொங்கலும், 100 தடா வெண்ணையும் கள்ளழகருக்கு தளிகை சமர்ப்பித்தார். ஆண்டாள் ஆசையும் நிறைவேறியது. இதனால் ராமானுஜருக்கு நம்கோவில் அண்ணன் என்று பெயர் ஏற்பட்டது.

பிறகு ராமானுஜர் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து புறப் பட்டு எல்லா தென் நாட்டு திவ்ய தேசங்களை தரிசனம் செய்து விட்டு, பிறகு வட தேசத்து திருப்பதிகளையும் தரிசனம் செய்துவிட்டு பூரி ஜகந்நாதரையும் தரிசனம் செய்து மதுரா, ஸ்ரீகாகுளம் வழியாக அஹோபிலம் வருகிறார் அங்கு நவ நரசிம்மர்களையும் தரிசனம் செய்து திருமலை வருகிறார். இது அவரது இரண்டாவது திருமலை விஜயம் (1060 கி.பி.) திருமலை வந்ததும் அவருக்கு பேரதிர்ச்சி தரும் செய்தி ஒன்று காத்திருந்தது. அங்குள்ள சிலர் திருமலையில் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ள மூர்த்தி சிவபெருமான் தான், விஷ்ணு அல்ல என்று கூற ஆரம்பித்துள்ளனர் என்ற செய்தி கேட்டு மனம் வருந்தினார். அவரது சங்கு சக்கரம் கழற்றப் பட்டிருந்தது. தனக்கு முன் வந்து தரிசனம் செய்து பாடிய ஆழ்வார்கள் பாடலெல்லாம் மேற்கோளாக எடுத்துரைத்து, அவர் நாராயணனே என்று கூறியும் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. பிறகு அவர் அனைவரையும் கூட்டி இந்த சிக்கலை தீர்க்க ஒரு வழி கூறினார்.

பெருமாளின் கர்ப கிருஹத்திற்குள்ளே ஒரு மேஜை போட்டு அதில் ஒரு பக்கம் பெருமாளின் சங்கு சக்கிரங்களையும், மற்ற பக்கம் சிவபெருமானின் ஆயுதங்களான சூலம், டமறு முதலியவற்றையும் வைத்து எல்லாரும் வெளியே போன பிறகு கர்பகிருஹத்தின் கதவுகளை சாத்தி பூட்டிவிட வேண்டும். பெருமானிடம் உனக்கு எது தேவையோ அதை நீயே எடுத்துச் சாத்திக் கொள்ள வேண்டும் என்று ஆண்டவனை வேண்டிக் கொண்டு வெளியேறினார்கள். மறுநாள் காலை கதவை திறந்து கற்பூர ஆர்த்தி காட்டும்போது ஸ்ரீனிவாஸர் சங்கு சக்கரங்கள் பளபளக்க ஒளி வீசிப்பிரகாசிப்பதை கண்டு அனைவரும் ஆனந்தத்துடன் ஆடிப்பாடினார். நீவீர் ஏழுமலை வாசனை பாம்பணையில் பள்ளிகொண்ட பரந்தாமனே எனக் கூறி கொண்டாடினர். ராமானுஜரும் வேங்கடாசலபதியை கண் குளிர வணங்கி மகிழ்ந்தார். அதன் பிறகு தெற்கு நோக்கி தன் பயணத்தை தொடர்ந்து திருவல்லிக்கேணி, காஞ்சீபுரம், திருவஹீந்தரபுரம், சிதம்பரம், சீர்காழி வழியாக தென் கோடி வரையுள்ள எல்லா திருக்கோவில்களையும் தரிசித்து கடைசியாக ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார்.

## ஸ்ரீ ரங்கத்தில் பலரும் சிஷ்யராக சேருதல்

ஸ்ரீ ரங்கத்தில் உறங்காவில்லிதாஸன் என்று ஒரு மல்லன் இருந்தான். அவன் கீழ் ஜாதியில் பிறந்தவன். அவனது மனைவியின் பெயர் பொன்னாச்சி என்பது. பெயருக்கு ஏற்ற நல்ல அழகானவள். மயக்கும் அழகான கண்களையுடையவள். அவள் அழகிலே மயங்கிய உறங்காவில்லிதாஸன் எங்கே தன் மனைவி வீதி வழியே வெய்யிலில் வெளியே சென்றால் அவளது கண்களின் அழகு கெட்டுவிடுமோ என்று அஞ்சி பகல் வேளைகளில் அவள் தெருவில் நடக்கும் போது எல்லாம் அவள் பின் ஒரு குடையை பிடித்தபடி செல்வான். பிறர் கேலி செய்வார்களே என்றெல்லாம் கவலைப்பட மாட்டான். ஒருநாள் ராமானுஜர் காவிரிக்கு குளிக்கப் போகும்போது இந்த காட்சியை கண்டு விசாரித்தார். சிஷ்யர்களும் தாஸனைப் பற்றி கூறினார்கள். உடனே ஒரு சிஷ்யனை அனுப்பி தாஸனை தன் மடத்திற்கு வந்து பார்க்கும்படி கூறி அனுப்பினார். உடனே அவனும் ராமானுஜரை வந்து சந்தித்தான். தாஸனும் தன் மனைவியின் அழகிய கண்கள் சூரிய ஒளியினில் கெட்டு விடக்கூடாது என்று தான் குடை பிடிப்பதாக கூறினார். அதற்கு ராமானுஜர் இதை விட அழகான கண்களை நான் காட்டட்டுமா என்று கேட்க அவனும் இருக்கவே முடியாது. அப்படி இருந்தால் காட்டுங்கள் என்று கேட்டான். உடனே அவர் அவனை திருவரங்கன் கோவிலுக்கு அழைத்துச் சென்று இரு கல்யாண தூண்களிடையே பள்ளி கொண்டிருக்கும் பங்கயல்

கண்ணனாகிய அரங்கனை பார்த்து, பெருமானே, உன் அழகிய தாமரை போன்ற கமலக் கண்களை இந்த தாசனுக்கு காட்டி அருள வேண்டும் எனக் கூற, அரங்கனும் அவ்வாறே அருள்பாலிக்க, தாஸனும் அந்த காந்த கண்களை கண்டு மயங்க, கண்களில் நீர் வழிந்து ஓட பெருமானை தரிசனம் செய்து கீழே வீழ்ந்து வணங்கினான். உடனே தன் கண்களை திறந்து விட்ட ராமானுஜரின் பாதங்களில் வீழ்ந்து தன்னையும் சிஷ்யனாக சேர்த்துக் கொள்ளும்படி வேண்டினான். அவரும் அவ்வாறே அவனை ஏற்றுக்கொண்டார். அதன் பிறகு அவனது மனைவியும் ராமானுஜரின் சிஷ்யை ஆனாள்.

இதன் பிறகு ராமானுஜர் எங்கு சென்றாலும் உறங்காவில்லிதாஸன் முதலில் கையில் குறுவாளுடன் முன்னே மெய்க்காப்பாளன் போல் செல்வான்.

உறங்காவில்லிதாஸன் மூலம் உலகிற்கு ஒரு உண்மையை விளக்க விரும்பினார். காவிரிக்கு குளிக்கச் செல்லும்போது உயர்ந்த பிராம்மண குலத்தில் பிறந்த முதலியாண்டான் கைகளை பிடித்துக் கொண்டு செல்வார். குளித்த பின் திரும்பும்போது உறங்கா வில்லிதாஸன் கைகளை பிடித்துக் கொண்டு மடத்திற்கு வருவார். இதன் மூலம் உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி பார்க்கக் கூடாது. பக்தியும் ஒழுக்கமே உயர்ந்தது என்ற உண்மையை உலகிற்கு எடுத்துக் காட்டினார் ராமானுஜர்.

ஒரு சமயம் ராமானுஜர் காலட்சேபம் செய்து கொண்டிருந்தார். விபீஷனர் சரணாகதி படலம். விபீஷணன் சேர்த்துக் கொள்ள கூடாது என்று அனைவரும் ராமரிடம் கூறினார்கள். ராமனோ நல்ல உள்ளம் படைத்தவன், மேலும் தன்னை நம்பி வந்து

சரணாகதி என்று காலில் விழுபவனுக்கு அடைக்கலம் கொடுத்து அவனுக்கு மோட்சத்தை தருவது தான் என் கடமை என்று ராமன் கூறுவதை ராமானுஜர் விரிவாக சொல்லிக் கொண்டு வந்தார். உணர்ச்சியில் கண்களில் நீர் வழிய கேட்டுக் கொண்டிருந்த தாஸன் திடீரென்று எழுந்து வேகமாய் வெளியே போனார். இதை கண்ட ராமானுஜர் அவனை அழைத்து, ஏன் போகிறாய் என்று கேட்டார். அதற்கு தாஸன் விபீஷனனோ ராஜா மிகவும் நல்லவன் அவன் சரணாகதியை ஏற்று மோட்சம் கொடுக்க இத்தனை எதிர்ப்புகள் இருக்கும்போது எனக்கு எங்கே மோட்சம் கிடைக்கப் போகிறது. ஆகவே தான் வெளியே போகிறேன் என்று கூறுகிறான். ராமானுஜரும் தாசனிடம் நான் மோட்சம் போவேன் என்று நீ நினைக்கிறாயா என்று கேட்க அவனும் நீங்கள் கட்டாயம் போவீர்கள் என்று கூறுகிறான். அதற்கு அவர் அப்படியானால் உன்னை நான் கட்டாயம் அழைத்துப் போவேன் என்று கூற தாஸன் ஆனந்தமடைகிறான்.

ஆளவந்தார் அவர்களின் சிஷ்யன் மாறநேறி நம்பி. இவர் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர். ஆனால் ஆளவந்தாரிடம் சிஷ்யராக சேர்ந்து அவர்மீது மிகுந்த ஈடுபாடு உள்ளவர். ஆளவந்தாருக்குப் பிறகு ராமானுஜருடைய குருவான பெரிய நம்பியிடம் ஈடுபாடு கொண்டிருந்தார். அவர் இறக்கும் தருவாயில் பெரிய நம்பியிடம் ஒரு வேண்டு கோள் வைத்தார். நானோ மஹா உத்தமமான ஆளவந்தாருடைய திருவடிகளை ஆராதித்து வந்தவன். ஒரு வைஷ்ணவன் செய்ய வேண்டிய வழிமுறைகளை தவறாது பின்பற்றுபவன். நான் இறந்தபின் என் உறவினர்கள் கீழ்தரமாக எடுத்து ஈனத்தனமாய் தகனம் செய்து விடக்கூடாது. தாங்களே எனக்கு தகுந்த ஒரு வைஷ்ணவனுக்குச் செய்யத் தகுந்த முறையில் என் ஈமக்கடன்களை செய்ய முன் நின்று ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டு இறக்கிறான்.

அவனது வைஷ்ணவ பக்திக்கு மெச்சி பெரிய நம்பிகளே தானாகவே அவனுக்கு எல்லா ஈமச் சடங்குகளை செய்தார். இதைகண்ட அந்த ஊரில் இருந்த அந்தணர்கள் ராமானுஜரிடம் வந்து பெரிய நம்பிகள் (பெரிய நம்பிகள் பிராம்மணர்) செய்த காரியத்தை கூறி, "வாருங்கள்". நாம் அனைவரும் பெரிய நம்பிகளிடம் சென்று நியாயம் கேட்கலாம் என்று கூற, ராமானுஜரும் அவர்களுடன் தன் குரு பெரிய நம்பிகளிடம் வந்து நீர் செய்த காரியம் சரியோ எனக் கேட்டார். அதற்கு நம்பிகள் ராமபிரானை விட நீங்கள் உயர்ந்தவர்களா? ஒரு பறவைக்கு அவர் சம்ஸ்காரம் செய்யவில்லையா? தரும புத்திரனைவிட நீங்கள் உயர்ந்தவர்களா? கீழ் ஜாதிகளில் பிறந்த விதுரருக்கு அவர் சம்ஸ்காரம் முதலியவைகளை தானே செய்து வைக்கவில்லையா? அப்படி ராமபிரானும், தரும புத்திரரும் செய்தது தவறு என்றால் நான் மாறநேரி நம்பிக்கு செய்ததும் தவறுதான் என்று கூற அனைவரும் வெட்கி தலை குனிந்த படி திரும்பினார்கள். ராமானுஜரும் புன்முறுவல் பூத்தபடி மடத்திற்கு திரும்பினார்.

இது இவ்வாறு இருக்கையிலே இனி நாம் கூரத்தாழ்வான் வாழ்க்கையை பற்றி விரிவாகப் பார்ப்போம். அவர் சிஷ்யர்களின் திலகமாக திகழ்ந்தவர். சிறந்த சிஷ்யருக்கு உதரணமாக ஆழ்வானை போல கூறுவார்கள். ராமானுஜர் பிரம்மசூத்திரத்திற்கு பாஷ்யம் (உரை) எழுத மிகவும் உதவியாக இருந்தவர். ஆழ்வான் இல்லையேல் ராமானுஜர் ஸ்ரீ பாஷ்யத்தை எழுதியிருக்கவே முடியாது. ராமானுஜர் இல்லையேல் வைஷ்ணவ சமுதாயமே இல்லை. கூரத்தாழ்வான் இல்லையேல் ராமானுஜரே இல்லை என்றும் கூறுவார்கள். ராமானுஜருடைய எல்லா செயல்களுக்கும் உற்ற துணையாக இருந்தவர் ஆழ்வான். இனி கூரத்தாழ்வான் வாழ்க்கை பற்றியும் அவரது குணாதிசயங்களையும் விரிவாக பார்க்கலாம்.

## ஆழ்வான் குழந்தைகளின் ஆச்சாரியர்கள்

ஆழ்வானுக்கு, அரங்கனது அருளால் பிறந்த பிள்ளைகள் பராசர பட்டரும், வேத வியாச பட்டருமாம். இரட்டைக் குழந்தையாக சக வருஷம் 983ம் ஆண்டு சுவக்ருது வருஷம் அனுராதா நஷத்திரம் கூடிய பௌர்ணமி இரவில் பிறந்தன. இவர்களுக்கு நாமகர்ணம் செய்ய ராமானுஜர், எம்பார் என்ற தனது சிஷ்யரிடம், ஆழ்வான் குழந்தைகளை எடுத்து வாரும் என்று பணித்தார். எம்பாரும் எடுத்து வரும் வழியிலே திருஷ்டி, தோஷங்கள் தக்காது இருக்க ரக்ஷயாக த்வயம் மந்திரத்தைக் கூறிக் கொண்டு வந்தார். குழந்தைகளைக் கண்ட ராமானுஜர் அவர்களின் முகத்தில் தேஜஸ் ஜொலிப்பதைக் கண்டு காரணம் கேட்க எம்பாரும் குழந்தைகளின் காப்பாக த்வயம் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு வந்ததால்தான் இவ்வாறு தேஜஸாக இருப்பதாகக் கூறினார். உடனே ராமானுஜரும் எம்பாரிடம் யார் ஒருவன் முதலில் த்வயம், சொல்லிக் கொடுக்கிறானோ அவனே ஆச்சாரியன் ஆவான். ஆகவே நீங்களே இவர்களுக்கு ஆச்சாரியனாக இரும் என்று ஆணையிட்டார். ராமானுஜரும் குழந்தைகளுக்கு ஆளவந்தார் ஆணைப்படி பராசர பட்டர், வேத வியாச பட்டர் எனப் பெயரிட்டார்.

இக்குழந்தைகளுக்கு ஆழ்வானும் ஆச்சாரியன் ஆவார் என்று கூறப்படுகிறது. இது எப்படி என்று

பார்ப்போம். ஆழ்வானின் திருக்குமாரர்கள் ஒருநாள் **“எண்பெருக்கந் நலத்து”** என்ற திருவாய் மொழி (1-2-10) பாசுரத்திற்கு அர்த்தம் கேட்டனர். இதற்கு அர்த்தம் கூற வேண்டுமானால் திருமந்திரார்த்தத்தை விவரித்துக் கூற வேண்டும். திருமந்திரத்தை ஆச்சாரியன் வாயிலாகத் தான் கேட்க வேண்டும் என்று கூறி, உங்கள் ஆச்சாரியன் சமயம் வரும்போது உபதேசிப்பார், அப்பொழுது அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள் என்றார். பிறகு சற்று நேரம் கழித்துச் சிந்தித்த ஆழ்வான், மனிதன் நிலையானவன் அல்ல. எது வேண்டுமானாலும் எப்பொழுதும் நேரலாம். ஆகவே குழந்தைகள் கேட்ட சந்தேகத்தைத் தீர்ப்பது தனது கடன் என்று எண்ணி, அவர்களது ஆச்சாரியன் கூறும் வரையில் காத்திராமல் அவர்களை அழைத்து அவர்களுக்கு திருமந்திரத்தை உபதேசித்து, அப்பாசுரத்திற்கு விளக்கமும் கூறினார். யார் ஒருவர் த்வயம் மற்றும் திருமந்திரத்தை உபதேசிக்கிறார்களோ அவரே ஆச்சாரியன் ஆவார். ஆகவே இக்குழந்தைகளுக்கு எம்பார் மற்றும் தந்தையாகிய ஆழ்வான் ஆகிய இருவரும் ஆச்சாரியர்கள் ஆகிறார்கள். இதையே பட்டர் சஹஸ்ர நாம பாஷ்யம் அருளிச் செய்த போது ஆச்சார்ய வந்தனம் செய்யும் முதல் ஸ்லோகத்தில் **“வந்தே கோவிந்த தாதௌ”** என்று எம்பாரையும் தன் தகப்பனாரையும் தொழுவதாகக் குறிப்பிட்டுள்ளார். ரங்கராஜ ஸ்தவத்திலும் இரண்டு ஆச்சாரியர்களுக்கு இரண்டு ஸ்லோகங்களை துதியாக இயற்றியுள்ளார்.

ஒருநாள் பட்டர் ஆழ்வானிடம் திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்கும் போது **“உறுமோ பாவியேனுக்கு”** என்ற பாசுரத்தில் (8-10-3) சிறுமா மனிசர் என்ற சொல்லுக்கு பட்டர் ஆட்சேபம் தெரிவித்தார்.

ஒன்றுக்கொன்று எதிரான, சிறுமை, பெருமை என்று குணங்கள் இரண்டும் ஒரு பொருளினிடத்தில் எப்படி சேர்ந்திருக்க முடியும் என்று கேட்டார். அதற்கு ஆழ்வான் மகனிடம் பதிலாக உருவத்தில் குள்ளமாக உள்ளவர்கள் ஞானம், அறிவு இவற்றால் மிகச் சிறப்பாக விளங்குவது உண்டு. அவர்களை சிறு மாமனிசர் என்று கூறுவது தவறில்லை. உதாரணமாக சிறியாச்சான் அருளாளப் பெருமாளெம் பெருமானார் என்பவர் உருவத்தில் சிறிதாக இருந்தும் ஞானத்தில் உயர்ந்திருப்பதை சுட்டிக் காட்டி விளக்கினார்.

இதுபோலவே தமிழை உலகிற்கு தந்த அகஸ்திய மாமுனிவரும் உருவத்தில் சிறிதாகவும், கீர்த்தியில் பெரியவராகவும் விளங்கியது மற்றொரு உதாரணம்.

## ஆழ்வானின் குணாதிசயங்கள்

ஸ்ரீ ரங்கத்தில் ஒரு வயது முதிர்ந்த நல்ல மனிதர் இருந்தார். சமூகத்தில் அவருக்கு நல்ல அந்தஸ்து இருந்ததால் அனைவரும் அவருக்கு மரியாதை காட்டி வந்தனர். அவரும் எல்லாம் தெரிந்ததாகக் காட்டிக் கொள்வாரே தவிர அவர் அதிகம் கற்றவர் அல்லர். இது அவர் மனதில் வெகுகாலம் உறுத்திவரவே அவர் கல்வி ஞானம் பெற ஆவலானார். ஆனால் வெளிப்படையாகக் கற்றால் இதுவரைத் தனக்கு ஒன்றும் தெரியாது என்ற உண்மை வெளிப்பட்டு அதனால் தனக்கு அவமரியாதை ஏற்படும் என்று கருதினார். ஆனால் சத்விஷயங்களைக் கற்க வேண்டும் என்ற ஆர்வம் தினமும் அதிகரித்து வரவே அவர் கூரத்தாழ்வானிடம் வந்தார். தன் நிலையையும் ஆர்வத்தையும் விளக்கிக் கூறித் தன்னுடைய தன்மானத்திற்குப் பங்கம் வராதபடி ரகசியமாய்க் கற்றுக் கொடுக்கும்படி வேண்டினார்.

ஆழ்வானும் அவ்வாறே செய்வதாக வாக்குறுதி யளித்தார். தனக்குப் பாடம் சொல்லித் தருவதை யாருக்கும் சொல்லக்கூடாது என்று உறுதிமொழி வாங்கிக் கொண்டு படிக்கலானார். மாலை வேளையில் இருவரும் ஊர் கோடியில் உள்ள ஒரு அடர்ந்த நந்தவனத்திற்குள் சென்று யாரும் வராத இடத்தில் கற்க ஆரம்பித்தார்.

ஆழ்வானும் அங்குள்ள ஒரு மண்டபத்தின் மேல் உள்ள ஒரு மேடையில் அமர்ந்து ஒரு கையில் ஓலைச்சுவடி ஏந்தி மற்றொரு கையில் விவரித்துக் கொண்டிருப்பார். அந்த மனிதனும் கீழே அமர்ந்து இரு கைகளையும் கட்டியபடி வாய் பொத்திக் கொண்டு கேட்டபடி இருப்பார். இப்படி நடந்து கொண்டிருக்கும் போது ஒருநாள் ஆழ்வான் பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.

திடீரென்று ஆழ்வான் தன் கைகளில் உள்ள ஓலைச்சுவடிகளை அந்த மனிதரிடம் கொடுத்து, தான் அமர்ந்த இடத்தில் அவரை அமரச் சொல்லி, நிறுத்து என்று கூறும்வரை படித்துக் கொண்டிரும், எந்தக் காரணமும் இப்பொழுது கேட்கக் கூடாது என்று கூறி அந்த மனிதர் அமர்ந்திருந்த இடத்தில் அமர்ந்து கைகட்டி வாய் பொத்தியபடிக் கேட்டுக் கொண்டிருந்தார். இது பார்ப்பவருக்கு அம்மனிதன் ஆசிரியன் போலவும் ஆழ்வான் சிஷ்யர் போலவும் காட்சியளித்தது. சிறிது நேரம் கழித்துப் போதும் என்று கூறிப் பழையபடியே மேலே அமர்ந்து ஓலைச் சுவடியை வாங்கிப் பாடம் நடத்தலானார். அன்றைய பாடம் முடிந்தபின் அம்மனிதன் ஆழ்வானிடம் காரணம் கேட்க அதற்கு ஆழ்வான் காரணம் கூறலானார். படிக்கும்போது,

உனக்குப் பின்புறம் உள்ள பாதையில் உனது உறவினன் ஒருவன் வருவதைப் பார்த்தேன். நீ கற்கும் விஷயம் யாருக்கும் தெரியாமல் இருக்கும்படிப் பார்த்துக் கொள்வதாக உனக்கு வாக்கு கொடுத்துள்ளேன். அதைக் காப்பாற்றவே நீ ஆசிரியனாகவும் நான் மாணவனாகவும் மாறினேன். இப்பொழுது அவன் உன்னை தவறாக எண்ணமாட்டான். நானும் என் வாக்கைக் காப்பாற்றி விட்டேன் என்று கூறினார். உடனே அந்த மனிதன் ஆழ்வானின் திருப்பாதங்களில் வேரற்ற மரம் போல் வீழ்ந்து, ஸ்வாமி என்ன காரியம் செய்து விட்டீர்கள். என் மானத்தைக் காக்க வேண்டி தங்களது மரியாதையைக் காற்றில் பறக்க விட்டு விட்டீர்களே. இக்காட்சியைப் பார்த்த அந்த மனிதன் எல்லாரிடமும் ஆழ்வான் ஒரு சாதாரண மனிதனான என்னிடம் கல்வி கற்றார் என்று கூறிக் கொண்டு போனால் உங்களது தன்மானம் என்ன ஆகும். தனக்கு குறைவு ஏற்படும் என்று தெரிந்தும், கொடுத்த வாக்கை காப்பாற்ற இவ்வாறு செய்தீர்களே. தாங்கள் கல்விச் செறுக்கற்றவர் என்று நிரூபித்து விட்டீர் என்று கூறிப் புலம்பினான். ஆழ்வானும் மரியாதை, பெருமை எல்லாம் பிறர் கூறுவதால் வருவதில்லை. நாம் நடக்கும் விதத்தில் தான் உள்ளது என்று கூறி அவனைத் தேற்றினார்.

**“பாரித்தெழுந்த படைமன்னர்**
**தம்மையாள, பாரத்து**
**தேரில் பாகனா யூர்ந்த**
**தேவ தேவனூர் போலும்”**

என்ற திருமங்கை மன்னன் பாடிய திருமொழி (7-5-2) பாசுரத்தில் கண்ணன் பரம்பொருளாக இருந்தபோதும், சாதாரண அரசனாகிய அர்ச்சுனனுக்குத்

தேர் ஓட்டிய போது, அர்ச்சுனன் மேலே அமர்ந்திருக்க கண்ணன் கடைநிலை ஊழியனாய்த் தேர்ப்பாகனாகக் கீழே தேர் தட்டில் அமர்ந்திருந்த காட்சிக்கு உதாரணமாக ஐதீகத்தில மேலே கூறிய ஆழ்வான் பாடம் சொல்லித் தரும் விளக்கத்தைக் கூறி, கண்ணன் கீழும் அர்ச்சுனன் மேலும் அமர்ந்த காட்சிக்கு இணையாக ஆழ்வான் சீடனாகவும் அம்மனிதன் ஆச்சார்யனாகவும் மாறியது உதாரணமாகக் கூறப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சி ஆழ்வான் கல்விச் செறுக்கற்றவர் என்று எடுத்துக்காட்டுகிறது.

ராமானுஜரின் குரு பெரிய நம்பி அவர்கள் ஸ்ரீ ரங்கத்திற்கு ஆபத்து வருவதைத் தடுக்க வேண்டி அரங்கனது கோவிலைச் சுற்றி வருவதாக வேண்டிக் கொண்டார். அப்பொழுது முகலாயர்கள் படை எடுத்த சமயம். கோவிலைச் சுற்றி வரும்போது தனக்கு ஏதாவது ஆபத்து வரும் என்று நினைத்துத் தன்னுடன் யாராவது துணை வந்தால் நலம் என்று கருதி, ராமானுஜரிடம் வந்து உமது சிஷ்யர்களில் யாரையாவது எனக்குத் துணையாக அனுப்பும்படிக் கேட்டுக் கொண்டார். அவரும் உமக்கு விருப்பமானவரை அழைத்துச் செல்லுங்கள் என்று கூறினார். பெரிய நம்பியும் ஆழ்வானே சிறந்தவர், ஏனென்றால் அவருக்குத்தான், தான் ஒருவர் பின்னால் போகிறோமே என்ற குலச்செருக்கில்லாதவர் என்று நினைத்து ஆழ்வானை அழைத்துக் கொண்டு சென்றார். இந்த நிகழ்ச்சி ஐதீகத்தில் கூறப்பட்டுள்ளது.

அரச குலத்தில் பிறந்தும், தான் ஒருவருக்கு காவலாக செல்கிறோம் என்ற எண்ணம் அற்றவராக, குலச் செருக்கற்றவராக விளங்கினார்.

## ராமானுஜரும், ஆழ்வானும் ஸ்ரீபாஷ்யம் எழுதுதல்

ஸ்ரீஆளவந்தார் கடைசி காலத்தில் ராமானுஜரைப் பார்க்க விரும்பினார். இது கேட்டு ராமானுஜர் அங்கு வருவதற்குள் ஸ்ரீஆளவந்தார் பரமபதம் அடைந்து விட்டார். ஆனால் அதற்கு முன்பு தன் சீடர்களிடம் ராமானுஜரிடம் மூன்று கட்டளைகளைக் கூறி அவற்றை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லும்படிக் கூறி இருந்தார். அவற்றில் ஒன்று பிரம்ம சூத்திரத்திற்குப் பாஷ்யம் எழுதுவது. பிரம்ம சூத்திரத்தை எழுதியது வேத வியாசர். இதற்கு விசிஷ்டாத்வைத அடிப்படையில் பாஷ்யம் ராமானுஜரால் எழுதப்பட வேண்டும் என்று ஸ்ரீ ஆளவந்தார் விரும்பினார். அந்த வாக்குறுதியை நிறைவேற்ற விரும்பினார் எதிராசர். இதற்கு உதவுவதற்காக போதாயனர் என்ற ரிஷி எழுதிய போதாயன விருத்தி என்ற கிரந்தத்தைப் படிக்க விரும்பினார். ஒரு விஷயத்தைச் சுலோகமாகக் கூறுவது சூத்திரம். அதற்கு ஆங்காங்கே விளக்கங்கள் கூறி புரியவைப்பது வ்ருத்தி எனப்படும். மேலும் விளக்கமாக உரை எழுதுவது பாஷ்யம் எனப்படும். அந்தப் போதாயன விருத்தி என்ற ஓலைச்சுவடி காஷ்மீரத்தில் சரஸ்வதி பந்தர் என்ற புத்தக சாலையில் இருப்பதாகக் கேள்விப்பட்டார். உடனே எதிராசர், ஆழ்வானுடன் மற்றும் எம்பார், முதலியாண்டான், வரதவிஷ்ணு ஆச்சாரியார் இவர்களுடன் காஷ்மீரம் செல்லப் புறப்பட்டார். நீண்ட நெடும் பயணமாகக் கால்நடையாய் காஷ்மீரம் வந்தடைந்தார்.

காஷ்மீரத்து அரசனும், அங்குள்ள பண்டிதர்களும் அவரைப் பெரிதும் உபசரித்து வரவேற்றனர். சில காலம் அங்கே அவர் ஆற்றிய காலட்சேபங்களைக் கேட்டு மகிழ்ந்தனர். ஒருநாள் ராமானுஜர் அரசனிடம் தன் விருப்பத்தையும், தான் வந்த காரியத்தையும் கூறிப் போதாயன விருத்தி கிரந்த ஓலைச் சுவடியைக் கேட்டார். அங்கிருந்த பண்டிதர்களோ சற்றுத் திகைத்து நின்றனர். போதாயன விருத்தி ஓலைச்சுவடியை இவர் பார்த்து விட்டால் அத்வைதத்திற்கு எதிராக இவர் எழுதி விடுவார் என்ற அச்சத்தில் அரசரிடம் அந்த ஓலைச்சுவடி செல்லரித்துப் போய்விட்டதாகக் கூறினர். ராமானுஜரும் மிகவும் இடிந்து போய்விட்டார்.

அன்று இரவு சரஸ்வதி தேவி ராமானுஜர் முன்பு தோன்றிச் சரஸ்வதி பந்தர் புத்தகசாலையில் உள்ள அந்த ஓலைச் சுவடிகளைக் கொடுத்து ஆசீர்வதித்து மறைந்தார். மறுநாள் இதை யாரிடமும் கூறாமல் எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு ராமானுஜர் காஷ்மீரத்தை விட்டுக் கிளம்பி தன் ஊருக்குப் பயணமானார். சுமார் ஒரு மாதம் சென்றதும் அந்தப் பண்டிதர்களுக்குச் சந்தேகம் வரவே புத்தகசாலை சென்று பார்க்க அங்கு போதாயன விருத்தி ஓலைச்சுவடி காணாதிருப்பதைக் கண்டு, அதை ராமானுஜர் தான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என்று நினைத்துச் சில வீரர்களுடன் திருடர்கள் போல வேஷமணிந்து சென்று அவரிடமிருந்து அந்த ஓலை சுவடிகளை அபகரித்துத் திரும்பினர். ராமானுஜரும் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்று வருந்தினார். ஸ்ரீ ஆளவந்தாருக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றாமல் போய்விடுமே என்று சோகம் கொண்டார். கூரேசர் அப்பொழுது ஸ்வாமி, இந்த ஒரு மாத காலத்தில் தாங்கள் உறங்கிய பிறகு நான்

போதாய விருத்தி முழுவதையும் படித்துப் பார்த்தேன். தாங்கள் விரும்பினால் ஊர் திரும்பியதும் இவற்றை மறுபடியும் புதிதாக எழுதித்தர முடியும் என்று கூறினார். ஆழ்வானுக்கு ஒரு விஷயத்தை ஒருமுறை படித்து விட்டால் அது அப்படியே அவருக்கு மனப்பாடம் ஆகி விடும் அபார ஞாபக சக்தி உண்டு. இது கேட்டு அனை வரும் ஆனந்தக் கூத்தாடினார்கள். ராமானுஜரும் ஆழ்வானை ஆரத்தழுவி மகிழ்ந்து, உன்னால்தான் நான் ஆளவந்தா- ருக்குக் கொடுத்த வாக்குறுதி நிறைவேறப் போகிறது. இல்லை என்றால், நான் நரகம் தான் போயிருப்பேன் என்று கூறி மகிழ்ந்தார்.

இது விஷயமாக வேறு ஒரு கருத்தும் உண்டு. ராமானுஜரின் காலட்சேபங்களைக் கேட்ட அரசர் உவகை கொண்டு போதாயன விருத்தியைப் பார்வையிட ஒரு மாதம் அவகாசம் அளித்தான். அதன்பிறகு ராமானுஜர் அரசனிடம் அதைத் தன் ஊருக்கு எடுத்துச் சென்று மறுபடியும் திருப்பித் தருவதாக வாக்குறுதி அளித்தார். அரசனும் சம்மதித்து அதை அளித்தார். அந்த ஓலைச் சுவடி வெளியே செல்வதை விரும்பாத பண்டிதர்கள், ராமானுஜரை வழிமறித்து அந்த ஓலைச் சுவடிகளைத் திரும்ப எடுத்துச் சென்று விட்டனர். ஆழ்வானும் தான் இந்த ஒரு மாத கால அவகாசத்தில் நேரம் கிடைத்த போதெல்லாம் அதைப் படித்ததால் தன்னால் ஊர் திரும்பியதும் ஞாபக சக்தியால் எழுதித் தர முடியும் என்று கூற ராமானுஜர் மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தார்.

ஸ்ரீரங்கம் திரும்பியதும் ராமானுஜர் ஆழ்வானின் ஞாபக சக்தியால், தான் ஸ்ரீ பாஷ்யம் எழுதப் போவதாகக் கூறி கொண்டாடி எழுத ஆயத்தம் ஆனார். ராமானுஜர் கூறிக் கொண்டு வர, எதிரில் கூரேசர் ஓலையும்

எழுத்தாணியும் கொண்டு எழுத ஆரம்பித்தார். ஆழ்வானின் அறிவின் பேரில் அபார நம்பிக்கை கொண்டவர் எதிராசர். ஆனால் குருவுக்கு எதிராக எதுவும் பேசாதவர் ஆழ்வான். ஏதாவது தவறாகக் கூறினால் கூட குருவின் பிழையைச் சுட்டிக் காட்டமாட்டார். இதை உணர்ந்த ராமானுஜர், ஆழ்வானே, நீர் எழுதிக் கொண்டு வரும்போது, மாறான கருத்து உமக்குத் தோன்றினால் எழுதுவதைச் சற்று நிறுத்திவிடும். நான் புரிந்து கொண்டு மறுமுறை சிந்தித்துச் சரியான கருத்தைக் கூறுகிறேன் என்று கூறியபடி இருவரும் எழுத ஆரம்பித்தனர். ராமானுஜரும் தான் குரு என்ற அகந்தை இல்லாமல் அடிக்கடி ஆழ்வானின் கருத்தைக் கேட்டு, அதை அப்படியே ஏற்றுக்கொண்டு ஸ்ரீ பாஷ்யத்தில் சேர்த்துக் கொண்டார். ஸ்ரீ பாஷ்யத்தில் கூரத்தாழ்வான் நடை பல இடங்களில் இருப்பதாகக் கற்றுணர்ந்த வல்லுனர்கள் கூறக் கேட்டிருக் கிறேன். இவ்வாறு கூரத்தாழ்வான் உதவியுடன் இராமானுஜர் ஸ்ரீபாஷ்யத்தை எழுதி பாஷ்யகாரர் எனப் பெயர் பெற்றார்.

மேற்கூறியவாறு ராமானுஜரும் ஆழ்வானும் ஸ்ரீபாஷ்யம் எழுதியது, வியாச பகவான் மஹாபாரதம் எழுதிய கதையை நினைவூட்டுகிறது. மஹாபாரதம் எழுத முடிவு செய்த வியாசர் அதை எழுத்தாணி கொண்டு வேகமாக எழுதக் கூடிய திறமை வினாயகருக்கு மட்டும்தான் உண்டு என்று உணர்ந்து, அவரை அணுகி எழுதித் தருமாறு வேண்டினார் வினாயகரும் ஒப்புக் கொண்டு ஒரு நிபந்தனை விதித்தார். எனது எழுதுகோல் எழுத ஆரம்பித்தால் நிற்காது. ஸ்லோகங்கள் கூறும் போது, எங்கே இதனால் என் ஓட்டம் தடைபெறுகிறதோ அங்கேயே நிறுத்திவிட்டுப் போய் விடுவேன் என்றார். அதற்கு வியாசரும் மற்றொரு நிபந்தனை போட்டார்.

தான் கூறுவதைக் கண்ணை மூடிக்கொண்டு எழுதக் கூடாது. அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு எழுத வேண்டும் என்று கூறினார். வினாயகரும் சம்மதித்து எழுத ஆரம்பித்தார். வியாசரும் தான் எங்கு யோசிக்க வேண்டுமோ அந்தந்த இடங்களில் ஒரு கடினமான பதத்தைக் கூறுவார். அதன் அர்த்தத்தை வினாயகர் யோசித்து எழுதுவதற்குள் மேலும், இரண்டு ஸ்லோகங் களை மனதில் தயார் செய்து விடுவார். இவ்வாறு தடங்கல் இல்லாது இருவரும் பாரதக் கதையை எழுதி முடித்ததாக ஒரு கதை உண்டு. எழுத்தாணிக்குப் பதிலாக வினாயகர் தன் ஒரு தந்தத்தை ஒடித்து எடுத்துக் கொண்டு அதை எழுத்தாணியாகப் பயன்படுத்தி எழுதியதால் அவரை ஏகதந்தன் என்றும் கூறுவார்கள். வினாயகர் உதவியால் வியாசபகவான் பாரதத்தை எழுதியது போல, கூரத்தாழ்வான் உதவியால் ராமானுஜர் ஸ்ரீபாஷ்யம் எழுதி முடித்தார்.

## வைஷ்ணவத்தைக் காக்க ஆழ்வான் தன் கண்களை இழந்தார்

அந்தக் காலத்தில் சோழ நாட்டை சிதம்பரத்தைத் தலைநகராகக் கொண்டு முதலாம் குலோத்துங்க சோழ அரசன் ஆண்டு வந்தான். இவன் பழுத்த சிவபக்தன். முன்னொரு காலத்தில் ஆழ்வானிடம் சிஷ்யனாக இருந்த கஞ்சனூரைச் சேர்ந்த நாலூரான் என்பவன் பிற்காலத்தில் அவரை விட்டுப் பிரிந்து, சேர்க்கை தோஷத்தால் அத்வைதியாக மாறி, சோழ ராஜாவிடம் மந்திரியாகப் பணியாற்றி வந்தான். அவன் ராமானுஜரிடம் உள்ள பகைமையால் அரசனிடம் வைஷ்ணவத்தைப் பற்றித் தவறாகக் கூறி வைணவர் களைத் துன்புறுத்தி வந்தான். அரசனிடம் கூறி எல்லா வைணவர்களிடமும் சிவனை விட உயர்ந்த தெய்வம் யாரும் இல்லை என்று ஓலைச் சுவடியில் எழுதி கையெழுத்து வாங்குமாறு செய்தான். அப்படியும் திருப்தியடையாத நாலூரான் அரசனிடம் ஒருநாள், இவர்களிடம் கையெழுத்து வாங்குவதைவிட இவர்களின் தலைமை குரு ராமானுஜரிடம் கையெழுத்து வாங்கினால், வைஷ்ணவச் சமுதாயமே சைவத்திற்கு அடிமை பட்டது போல் ஆகும் எனக் கூறினான். அரசனும் ஸ்ரீரங்கத்திற்குத் தகுந்த வீரர்களை அனுப்பி ராமானுஜரைக் கைது செய்து வரும்படி ஓலை கொடுத்து அனுப்பினான்.

சேவகர்கள் வரும்போது ராமானுஜர் காவிரிக் கரையில் தவராஜன் படித்துறையில் குளித்துக் கொண்டிருந்தார். அவரது காஷய ஆடை, திரிதண்டம்

முதலிய மற்ற பொருள்களுக்கு காவலாக ஆழ்வான் காவேரியின் கரையில் காத்திருந்தார். சேவகர்கள் கொடுத்த அரசரது ஆணையைப் படித்த கூரேசர் தன் குருவுக்கு ஏதோ ஆபத்து வரப்போகிறது என்று எண்ணி உடனே தன் குருவின் காவி வஸ்திரத்தைத் தான் உடுத்தி அந்த இடத்தில் தான் அணிந்த வெள்ளை உடைகளை வைத்து விட்டு நான்தான் ராமானுஜர் என்று கூறிக் கொண்டு அவர்களுடன் புறப்பட்டார். (ஆழ்வான் எப்பொழுதும் வெள்ளை வஸ்திரங்களையே உடுப்பவர்). உடன் இருந்த சீடர்களிடம் நடந்ததை ராமானுஜரிடம் கூறுமாறு சொல்லிப் புறப்பட்டார். அவருடன் பெரிய நம்பியும் உடன் வந்தார். அரசசபை வந்தடைந்ததும் உண்மையை அறிந்த நாலூரான் அரசனிடம் வந்திருப்பது ராமானுஜர் அல்லர், அவரது சிஷ்யன் ஆழ்வானே என்று காட்டிக் கொடுத்தான். அரசனும் மிகவும் கோபம் கொண்டு ஒரு ஓலையில் "சிவாத்பாதரம்" நாஸ்தி என்று எழுதி ஆழ்வானைக் கையொப்பம் இடும்படிக் கூறினான். ஆழ்வானோ மறுத்து விட்டு ஸ்ரீமன் நாராயணனே உயர்ந்த தெய்வம். வேண்டுமானால் இதை வாதத்தில் நிரூபிக்கத் தயார் என்று கூறினார். அவ்வாறே அரசன் ஆணையிட, சைவ சமயத்தின் சார்பாக ஹரதத்தர் என்பவருக்கும், கூரத்தாழ்வானுக்கும் விவாதம் பண்டிதர்கள் சபையில் ஆரம்பம் ஆயிற்று. இந்த விவாதம் தொடர்ந்து ஏழு நாள்கள், ஏழு இரவுகள் நடந்தன. இந்த விவாதம் பற்றிய விவரங்கள் கூரேச விஜயம் என்ற நூலில் 37 ஸ்லோகங்களில் கூறப் பட்டுள்ளது. இந்த நூலை யார் எழுதியது என்று தெரிய வில்லை. இதில் ஹரதத்தர் செய்த வாதம் 5 ஸ்லோகங் களிலும், அதற்கு ஆழ்வானது பதில்கள் 32 ஸ்லோகங் களிலும் கூறப்பட்டுள்ளது. கடைசி ஸ்லோகத்திற்குச்

சைவர்கள் பதில் பேசாமல் வாய் பொத்தி நின்றுவிட்ட தாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் கோபமடைந்த அரசன், அந்த ஓலையில் கையெழுத்துப் போடும்படி வற்புறுத்தினார். அதை ஆழ்வான் வாங்கி **த்ரோண மஸ்தி தத: பரம்:,** என்று சிலேடையாக எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தார். சிவனை விட உயர்ந்தது எதுவும் இல்லை என்பதற்குப் பதிலாக இவ்வாறு எழுதினார். இதற்குப் பொருள் சிவத்தைவிட பதக்கு பெரியது என்பதாகும். அந்தக் காலத்தில் அளவு கோலாக - படி, அரைப்படி, கால்படி, ஆழாக்கு, உழக்கு என்று பல அளவைகளில் உழக்குக் கீழ் பதக்கு, சிவம் என்று சிறிய அளவைகளும் இருந்தன. கடைசி அளவையின் பெயர் சிவம். இதையே சிலேடையாக சிவம் என்ற அளவவை விட பதக்கு என்ற அளவை உயர்ந்தது என்று பொருள்பட எழுதிக் கொடுத்தார். இதனால் கோபம் அடைந்த அரசன் ஆழ்வான், பெரிய நம்பி ஆகிய இருவரது கண்களையும் பிடுங்க உத்திரவிட்டான். உடனே ஆழ்வானும் இந்தப் பாவியைப் பார்த்த எனக்கு இந்தக் கண்கள் வேண்டாம் எனக் கூறித் தன் கண்களைத் தானே பிடுங்கி அரசன் முன்னிலையில் எறிந்தார். உடன் வந்த பெரிய நம்பியின் கண்களும் பிடுங்கப்பட்டன. இந்த இருமகான்களும் ராமானுஜ தர்சனத்திற்காக தங்கள் தர்சனங்களை (கண்களை) இழந்தனர். இந்த அரசனும் செய்த பாவத்திற்காகப் பிற்காலத்தில் கழுத்தில் கிருமி கண்டு இறந்தான். அவனைக் கிருமி கண்ட சோழன் என்று வரலாறு பழித்தது.

ஸ்ரீரங்கத்தில் குளித்து விட்டு வெளிவந்த ராமானுஜர், தன்னுடைய காவி வஸ்திரங்களைக் காணாது, அவ் விடத்திலே கூரேசரின் வஸ்திரங்கள் இருப்பது கண்டு,

ஆழ்வான் எங்கே என்று முதலியாண்டானிடம் கேட்க, அவரும் நடந்ததைக் கூறினார். இராமானுஜரும் ஆழ்வான் செய்த தியாகத்தினை எண்ணி நெஞ்சுருகி நின்றார். அங்கிருந்த அனைவரும் உண்மை தெரிந்து, எந்த நிமிஷம் ஆபத்து வரும் என்று எச்சரித்து, உடனே ராமானுஜரைச் சோழ தேசத்தை விட்டு வெளியே போகும்படி வற்புறுத்திக் கூறினார்கள். ராமானுஜரும் வழக்கத்திற்கு மாறாக. காவி வஸ்திரம் உடுத்தாமல் தன் சிஷ்யன் செய்த தியாகத்திற்குப் பெருமை தரும் பொருட்டு, ஆழ்வான் அணியும் வெள்ளை உடைகளை அணிந்து, ஆழ்வானுக்கு என்ன ஆயிற்றோ என்று நினைத்தபடிச் சோழ நாட்டை விட்டு வெளியேறினார். இன்று கூட, இந்த நிகழ்ச்சியை நினைவுறுத்தும்படி உடையவர் அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்புதூரில் உடையவரின் உற்சவத்தில் 6ம் நாள், ராமானுஜருக்கு வெள்ளை வஸ்திரமும், ஆழ்வானுக்கு காவி வஸ்திரமும் அணிவித்து வெள்ளை சாத்துப்படி அல்லது கூரேச விஜயம் உத்ஸவம் நடத்தப்பட்டு, அதைக் கண்டு மக்கள் இன்றும் ஆனந்தப்பட்டு வருகிறார்கள்.

கண்களை இழந்த ஆழ்வானும் பெரிய நம்பியும், வழியில் இருக்கும் ஊர்களில் உள்ள வைஷ்ணவர்களால் பாதுகாக்கப்பட்டு ஸ்ரீரங்கம் நோக்கப் பயணமானார்கள். பெரிய நம்பி மிகவும் வயதானவர்கள். ஆகையால் கண் உபாதை தாங்க முடியாமல் வழியிலேயே ஸ்ரீ பராந்தகபுரம் என்ற ஊரிலே ஆழ்வான் மடியிலே தன் தலையை வைத்து உடன் வந்த அத்துழாய் என்ற மகள் மடியில் காலை வைத்தபடி வைகுண்டம் சென்று அடைந்தார். ராமானுஜரின் குருவாகிய பெரிய நம்பி ஸ்ரீரங்கத்தில் மோட்சமடைவதையே ஆழ்வான் விரும்பினார். அதற்கு பெரிய நம்பி எல்லாரும் ஸ்ரீரங்கத்தில் உயிர் விட

விரும்பினால் ஸ்ரீரங்கத்தில் இடமிருக்காது. மேலும் நல்லவர்கள் எங்கு இருந்தாலும் பரந்தாமன் பாதங் களைப் பற்றினால் மோட்சம் உண்டு என்று கூறி இதுவே ஆண்டவன் விருப்பம் போலும் எனக் கூறியபடி வைகுந்த பதவி அடைந்தார். அந்த ஊரிலேயே அவருக்கு ஆழ்வான் தன் கையாலேயே ஈமக் கடன்கள் நடத்தி விட்டு அவர் மகளுடன் ஸ்ரீரங்கம் வந்தடைந்தார்.

ஸ்ரீரங்கம் வந்தடைந்ததும் ஆழ்வான் நேராக பெரிய கோவிலுக்கு அரங்கனை தரிசனம் செய்ய சென்றார். ஆனால் சேவகர்கள் அரசர் ஆணைப்படி ராமானுஜ சம்பந்தம் உள்ளவர்கள் யாரும் உள்ளே சென்று தரிசனம் செய்யக் கூடாது என்ற உத்திரவைக் கூறி, தடுத்து நிறுத்தினர். அங்குள்ள அவரை நன்கு அறிந்த சேவகன் ஒருவன், இவருக்கு ராமானுஜருடைய சம்பந்தம் இருந்தாலும் இவர் மிகவும் நல்லவர். ஆகவே இவரை மட்டும் அனுமதிக்கலாம் என்று கூறினார். அரங்கன் தரிசனத்திற்கு ராமானுஜர் சம்பந்தம் ஒரு தடையாக இருக்குமானால், அந்த அரங்கனை தரிசனம் செய்ய நான் விரும்பவில்லை எனக் கூறி வெளியே வந்தார்.

ஸ்ரீரங்கத்தில் ராமானுஜர் இல்லாமல் வசிக்க விரும்பாத ஆழ்வான், நேராக சோழ தேசத்தின் ஆளுகைக்கு உட்படாத பாண்டிய தேசத்தை சார்ந்த அழகர் கோவில் என்ற திருமாலிருஞ்சோலைக்கு வந்து வசிக்க ஆரம்பித்தார். வரும் வழியிலேயே இவர் அதிமானுஷ்ய ஸ்தவம், ஸ்ரீசுந்தரபாஹுஸ்தவம் என்ற ஸ்லோகங்களை இயற்றினார்.

இவ்வாறு ஆழ்வான் தன் குருவின் வருகைக்காக காத்திருந்து திருமாலிருஞ்சோலையில் 12 வருஷங்கள் தன் குடும்பத்துடன் வசித்து வந்தார்.

## மைசூர் பயணம்

இனி நாம் ராமானுஜரின் கதைக்கு வருவோம். குளிக்கச்சென்ற ராமானுஜர் வெளியே வந்து தன் காஷாய ஆடைகளை தேடினார். அந்த இடத்தில் உடுத்துக் களைந்த ஆழ்வானின் வெள்ளை ஆடை இருப்பதைக் கண்டு அருகில் உள்ள முதலையாண்டானிடம் தன் உடைகள் எங்கே என்று கேட்டார். முதலையாண்டான் நடந்தவற்றை கூறி அரசரது சேவகர்களால் தங்களுக்கு ஆபத்து காத்திருக்கிறது. ஆழ்வானின் சமயோசித புத்தியால் ஆபத்து தள்ளிப் போய் இருக்கிறதே தவிர முழுவதும் தீரவில்லை. ஆகவே நாம் இப்பொழுதே சோழ தேசத்தை விட்டு வெளியேற வேண்டுமென்று கூறினார். ராமானுஜரும் தன் சிஷ்யன் செய்த தியாகத்திற்கு உயர்வு அளிக்கும் பொருட்டு தன் நன்றியை காட்ட ஆழ்வானது ஆடைகளை அணிந்து கொண்டு கண்ணீர் மல்க அங்கிருந்து நேராக சிஷ்யர்களை அழைத்துக் கொண்டு மைசூர்நோக்கி பயணமாகினார். அவர் விருப்பப்பட்டிருந்தால் மடத்திலிருந்த வேறு சாதாரண ஆடை வரவழித்து அணிந்து கொண்டிருக்க முடியும். தன் சிஷ்யன் உடுத்தி களைந்த ஆடையை அவர் அணிந்துக் கொண்டார். வேறு யார் இவ்வாறு செய்வர்கள். இதுவே அவரது சிறப்பு.

குணசீலம், துறையூர் வழியாக கொல்லி மலை நோக்கி பயணமானார். அரச காவலர்கள் கண்டு பிடித்து விடுவார்களே என்று ராமானுஜர் வெள்ளை வஸ்த்திரத்

திலேயே பயணமானார். கொல்லிமலையிலே கொங்கு பிராட்டி என்பவர் வீட்டுத் திண்ணையில் தங்கினார்கள். அவர்களை கண்டதும் கொங்கு பிராட்டி வரவேற்று உபசரித்தாள். அனைவரும் குளித்து பூஜை முதலியவற்றை முடித்தபின் அவள் அவர்களை உணவருந்த அழைத்தாள். அவள் யார் என்ற விவரம் அறியாததால் சாப்பிட சற்று தயங்கினார்கள். ஒரு சிஷ்யன் உள்ளே சென்று அவனது பூஜை அறையில் சென்று பார்த்தார். அங்கு ஏதோ கருப்பாக இரண்டு பொருட்களை வைத்து பூஜை செய்து கொண்டிருப்பதை பார்த்தார். அது என்ன என்று கேட்ட போது அவள் தன் கதையை சொன்னாள். ஒரு சமயம் தனது நாட்டில் பஞ்சம் வந்த போது அவர் சிறிது காலம் திருவரங்கத்தில் வசித்து வந்தார். அப்பொழுது அங்கு ஒருவர் தினமும் காலட்சேபம் செய்வதை மனமுருகி கேட்பது வழக்கம். ஒரு நாள் அவள் ராமானுஜரின் கால்களில் வீழ்ந்து உங்கள் காலட்சேபங்கள் கேட்ட பின்பு என் மனம் ஒரு நிலைப்பட்டு பக்தியில் ஆழ்ந்தேன். நான் தினமும் பூஜிக்க வேண்டி தங்கள் காலணிகளை தந்து உபதேசிக்கும்படி கூறினார். ராமானுஜரும் அவ்வாறே ஆசீர்வாதம் செய்து தனது காலணிகளை தந்தார். தான் ஊர் திரும்பும் வேளை வந்ததும் மறுபடியும் ராமானுஜரிடம் வந்து சென்று வருவதாக கூறி மற்றுமொருமுறை உபதேசம் செய்யும்படி வேண்ட அவரும் அவ்வாறே செய்தார். திரும்ப தன் ஊராகிய கொல்லிமலை வந்ததும் அவரது பாதுகைகளை தினமும் பூஜை செய்து உணவு பரிமாறிய பிறகே உண்ணுவார். சிஷ்யன் அந்த சன்யாசியின் பெயர் என்ன என்று கேட்ட போது மறந்து விட்டதாகவும் அவர் முகம் மறந்த போதும் தினம் தான் வணங்கிய அந்தப் திருப்பாதங்களை என்றும் தன்னால் மறக்க முடிய

வில்லை என்றும் கூறினாள். அவர் கால்களை பார்த்தால் தன்னால் அடையாளம் காட்ட முடியும் என்றும் கூறினாள். உடனே அனைவரும் வரிசையாக வந்து நின்று தங்கள் கால்களை காட்டவே ராமானுஜர் அவர்களுடைய சிவந்த திருப்பாதங்களை கண்டதும், அந்த ஸ்வாமி இவர் தான் என்று கூறியபடி அவரது காலடிகளில் விழ்ந்து வணங்கினாள். மேலும் வெள்ளை ஆடையில் இருக்கவே சற்று சிரமப்பட்டதாக கூறினாள். அவர்கள் தங்கள் கதையை கூறி இவர்தான் ராமானுஜர். அவர் தந்த காலணிகளை தான் தாங்கள் தினமும் பூஜித்து வருகிறீர்கள் என்று கூற அந்த அம்மையார் ஆனந்த கூத்தாடினார். தான் இதுகாலம் பூஜித்து வந்த குரு, தான் அறியாமலே தன் வீட்டிற்கு வந்தது தான் செய்த பாக்கியம் என கூறி மகிழ்ந்தார். பிறகு மைசூர் செல்லுவதற்கு வழி கேட்டுக் கொண்டு காவிரி ஆற்றின் கரை ஓரமாகவே நடக்க ஆரம்பித்தனர். பிறகு மைசூர் மாகாணத்தில் உள்ள தொண்டனூர் என்ற ஊருக்கு வந்தனர்.

## பிட்டு தேவன் என்ற ஹொய்சல மன்னனை ஜைன சமயத்திலிருந்து வைஷ்ணவ சமயத்தை தழுவ செய்தல்

மைசூருக்கு அருகே உள்ள தொண்டனூரில் தொண்டனூர் நம்பி என்னும் ராமானுஜரின் சிஷ்யர் வசித்து வந்தார். அவர் ராமானுஜரின் வருகை கேட்டு அவரை சிறப்பாக வரவேற்றார். தொண்டனூரை பிட்டு தேவன் என்ற ஹொய்சல மன்னன் ஆண்டு வந்தான். அவனும் அவன் மனைவி சாந்தளா தேவியும், ஜைன மதத்தை பின்பற்றி வந்தார்கள். ராமானுஜர் வந்து சில காலம் தொண்டனூரில் தங்கியிருந்த போது அரசருடைய மகளுக்கு உடல்நிலை சரியாகாமல் இருக்க, அரசன் கவலையில் இருந்தான். சிலர் அவர் மகளுக்கு பேய் பிடித்துள்ளது என்று கூற அரசனின் ஆஸ்தானத்தில் உள்ள ஜைன குருமார்களை அழைத்து பேயை ஓட்டும்படி கூறினர். அவர்களும் பல ஜைன சன்யாசிகளை கூப்பிட்டு முயன்று பார்த்தும் சரியாகவில்லை. தொண்டனூர் நம்பிகளும் அரசரிடம் சென்று தன் குரு ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த ராமானுஜரைப் பற்றி கூறினார். அரசனின் மனைவி சாந்தளா தேவி தமிழ்நாட்டுக்கு 1055 கி.பி.யில் வந்த போது அவள் ராமானுஜரைப் பற்றி கேள்விப்பட்டு மரியாதை நிமித்தம் அவரை சென்று சந்தித்து, ராமானுஜரைப் பற்றி தன் கணவரிடம் கூறியது அரசனுக்கு நினைவுக்கு வந்தது. அப்பொழுது இருவரும் ஜைன மதத்தை தழுவியிருந்தார்கள். இதைக் கேட்டதும்

அரசன் தொண்டனூர் நம்பியிடம், ராமானுஜரை அழைத்து வர வேண்டிக் கொண்டு அவர் அப்படி தன் மகளை காப்பாற்றிக் கொடுத்தால் அவன் வைஷ்ணவ மதத்தை தழுவுவதாக வாக்களித்தான். அவ்வாறே ராமானுஜரும் அங்கு வந்த அரசகுமாரியை பார்த்து சில மந்திரங்களை உச்சரித்து தன் கமண்டலத்தில் உள்ள தீர்த்தத்தை அவளது முகத்தில் அடிக்க அரசகுமாரியும் மயங்கி வீழ்ந்தாள். மயக்கம் தெளிந்ததும் ராஜகுமாரி, ராமானுஜர் பார்வை பட்டதும் தெளிவுடன் எழுந்து வந்தாள். அவளது வியாதியும் குணமாகிவிட்டது. அரசனும், அரசியும் ராமானுஜர் காலில் விழுந்து வணங்கிய விரைவிலே வைஷ்ணவ சமயத்திற்கு மாறினார். ராமானுஜரும் அரசனுக்கு விஷ்ணு வர்த்தன் என்று பெயர் சூட்டினார். விஷ்ணுவர்த்தன், வைஷ்ண வனாக மாறியது மிகவும் பெரிய நிகழ்ச்சியாகும். இதுதான் கர்நாடக மூலைமுடுக்குகள் எல்லாம் வைஷ்ணவம் பரவ உதவியது. ராமானுஜர் உத்தரவுபடி விஷ்ணுவர்த்தன் பல வைஷ்ணவ கோவில்களை கட்டினார். மேல்கோட்டை என்னும் திருநாராயணபுரம் கோவில், தொண்டனூர் நம்பி நாராயணன் கோவில், தலைக்காடு கீர்த்தி நாராயணன் கோவில் (மைசூர் ஜில்லா) பேலூர் என்ற இடத்தில் உள்ள விஜய நாராயணன் என்ற சென்ன கேசவப் பெருமாள் கோவில், வீர நாராயணன் கோவில், (இது கதக் என்ற ஊரில் ஹுப்ளிதார்வார் ஜில்லாவில் உள்ளது) இந்த ஐந்து கோவில்களும் கர்நாடகத்தில் மிகவும் பிரசித்தி பெற்றவை. இதில் ஹாசன் ஜில்லாவில் உள்ள பேலூரில் (Belur) சென்ன கேசவப் பெருமாள் கோவில் கலைநயம் கொண்ட உலக சிறப்பு பெற்ற சிற்பக் கலைக்கே உன்னத

பொக்கிஷமாக கருதப் படுகிறது. இதை கட்டிய மாபெரும் சிற்பி அமரசிற்பி ஜக்கண்ணா என்பவர் ஆவார். இது தவிர அரசன் விஷ்ணு வர்த்தனால் மொத்தம் 958 சைவ, வைஷ்ணவ கோவில்கள் கட்டப்பட்டதாகவும், இன்றைய தேதியில் அழிந்து போன கோவில்கள் போக நல்ல நிலையில் இருப்பவை சுமார் 100க்கும் குறைவானவைகளே. ராமானுஜர் விஷ்ணுவர்த்தனை வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு மாற்றியதன் மூலம், ராமானுஜர் கர்னாடக தேசத்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் வைஷ்ணவம் பரவுவதற்கு அஸ்திவாரம் அமைத்தார்.

சரித்திரம் இவ்வாறு கூற, இனி ராமானுஜரின் கதைக்கு வருவோம்.

அரசன் விஷ்ணுவர்த்தன் வைஷ்ணவ சமயத்திற்கு மாறியது ஜைன சன்யாசிகளுக்கு பேரதிர்ச்சியாயிற்று. அவர்கள் மக்களுடன் சேர்ந்து எதிர்ப்பு கிளப்பினார்கள். முடிவில் 1000 திகம்பர ஜைன சன்யாசிகள் சேர்ந்து (ஆடை அணியாத ஜைன சன்யாசிகள் திகம்பரர் என்றும் ஆடை உடுக்கும் ஜைனர்கள் ஸ்வேதாம்பரர் என்றும் கூறுவார்கள்) ஒரு திரையில் ஒரு பக்கமும், மறுபக்கம் ராமானுஜரும் அமர்ந்து போட்டியிட ஆரம்பித்தார்கள். 1000 சன்யாசிகள் கேட்ட கேள்விகளுக்கு 1000 நாக்கு படைத்த ஆதிசேஷனின் அம்சமான ராமானுஜர் தகுந்த பதில் கூறி விவாதத்தில் ஜெயித்தார். இந்த 1000 ஜைன சன்யாசிகளுடன் 12,000 ஜைனர்கள் ராமானுஜர் முன்பு வைஷ்ணவ சமயத்தில் சேர்ந்தனர்.

## திருநாராயணபுரம் என்ற மேல்கோட்டையில் 12 வருஷங்கள் ஆற்றிய தொண்டு

இதன் பிறகு தொண்டனூரிலிருந்து புறப்பட்டு திருநாராயணபுரம் என்று அழைக்கபட்ட மேல் கோட்டைக்கு ராமானுஜர் வந்தார். ஒருநாள் தன் திருமண் பெட்டியில் நெற்றிக்கு இடும் திருமண் கட்டி மிகக் குறைவாக இருப்பதை கண்டு அன்றிரவு படுக்கும் போது தனக்கு திருமண் கிடைக்க வழிகாட்ட கடவுளை வேண்டியபடி படுத்தார். இரவு கனவிலே இறைவன் வந்து அருகில் உள்ள குளத்தின் மேற்கேயும், தென் மேற்கேயும் இரண்டு இடங்களை குறிப்பிட்டு தோண்டச் சொன்னார். முதலில் மேற்கு பக்கம் தோண்டும்போது திருமண் இடுவதற்கு தேவையான மண் நிறைய கிடைத்தது. தென் மேற்கே தோண்டும் பொழுது ஒரு மகிழ மரத்திற்கு அடியில் தோண்டும் போது திருநாராயணர் மூலவர் சிலை கிடைத்தது. 1080 கி.பி. ஆண்டு அரசன் விஷ்ணுவர்த்தன் மூலமாக அந்த இடத்தில் ஒரு பெரிய கலைநயம் கொண்ட கோவிலை கட்டுவித்தார். அதில் திருநாராயணப் பெருமாளை பிரதிஷ்டை செய்தார். துக்க கருடன ஹள்ளி என்ற அந்த ஊருக்கு திருநாராயணபுரம் என்று பெயரிட்டார். கோவிலை திறம்பட நிர்வாகம் செய்ய பல விதிமுறைகளை ஏற்படுத்தி உத்ஸவங்கள் நடத்தும் முறைகளையும் கூறினார். இந்த ஊருக்கு எதிசைலம் என்ற பெயரும் ஏற்பட்டது.

மூலவர் சிலை கிடைத்ததும் ராமானுஜர் உத்சவர் சிலை பற்றி விசாரித்தார். முகமதியர்கள் படையெடுப்பின் போது ராமப் பிரியன் என்ற உத்ஸவமூர்த்தி டெல்லி பாதுஷாவினால் கொள்ளையடிக்கப்பட்ட பொருள்களோடு டெல்லி எடுத்துச் செல்லப்பட்டதாக கேள்விப் பட்டு, டெல்லி சென்று பாதுஷாவை பார்த்து தான் வந்த காரியத்தை கூறினார். பாதுஷாவும் அவரைப் பார்த்ததும் மரியாதையோடு வரவேற்று தனது பொக்கிஷ அறைக்கு அதிகாரிகளுடன் அனுப்பி தேடி எடுக்கச் சொன்னார். அங்கு தேடியும் கிடைக்காததால் அரசன் விசாரிக்க, கடைசியில் அரசகுமாரியின் தோழிகள் அந்தப்புரத்தில் ஒரு சிலையோடு விளையாடுவதாக கேள்விப்படுகிறார். அந்த சிலையின் அழகிலே மயங்கி இளவரசி தன் படுக்கைக்கு அருகிலே வைத்து கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தாள். இது கேட்ட ராமானுஜர் அந்தப் புரத்திற்க்கு வெளியே நின்று கொண்டு "ராமப் பெருமானே என் செல்லப் பிள்ளையே சம்பத் குமாரா! வா" என்று கூப்பிட கதவு திறக்க ராமப்பிரியனின் சிலை துள்ளி குதித்தபடி ஓடி வந்து ராமானுஜரின் மடியில் வந்து அமர்ந்தது. பாதுஷாவும் ராமானுஜருக்கு பல மரியாதைகள் செய்து சிலையையும் கொடுத்து வழி அனுப்பி வைத்தார். சிலையின் மீது தீராக் காதல் கொண்ட இளவரசியும் சிலையுடன் செல்ல அடம் பிடிக்கவே பாதுஷா மகளை இளவரசன் துணையுட.ன் அனுப்பி வைத்தார். மேல் கோட்டை வந்ததும் திருநாராயணர் கோவிலே எதுகிரி நாச்சியாருடன் செல்லப்பிள்ளை என்ற பெயரிடப்பட்ட சம்பத்குமாரருடைய சிலையை பிரதிஷ்டை செய்வித்தார். பிரதிஷ்டை செய்த உடனே டெல்லி அரச குமாரி உடல் கீழே விழ சம்பத் குமார் சிலையில் ஐக்கியமானாள். அவருக்கு பீபீ நாச்சியார்

என்று பெயர். இன்றும் சம்பத்குமாரருடைய சிலை யடியில் சிறிதாக பீபீ நாச்சியார் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதை காணலாம். 1081ல் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள இந்த உத்ஸவரை கர்நாடக மக்களால் செலுவராஜ ஸ்வாமி என்று அழைக்கப்பட்டார். ராமானுஜர் சிறப்பாக உத்ஸவங்கள் செய்ய வழி வகுத்தார். 1083ம் ஆண்டு உத்ஸவத்தில் ஹரி ஜனங்களையும் பங்கேற்க சிறப்பு உரிமை கொடுத்தார். 1085(AD)ஆண்டு தொண்டனூரில் லஷ்மி நாராயணனர் உத்ஸவரை பிரதிஷ்டை செய்து மிகப் பெரிய ஏரி ஒன்றையும் வெட்ட வழி செய்தார். இதில் தண்ணீர் கோடைகாலம் உட்பட எப்பொழுதும் வற்றுவது கிடையாது என்பது சிறப்பு. எதிரே உள்ள மலையில் வீற்றிருக்கும் லஷ்மி நரசிம்மர் கோவிலையும் புதுப்பித்தார். தனது 73ம் வயதிலும் கர்நாடகம் முழுவதும் அயராது உழைத்து பல கோவில்கள் கட்ட வழி வகுத்து பலரையும் வைஷ்ணவத்திற்கு மாற்றி தளராது உழைத்தார்.

ராமானுஜர் கர்நாடகத்திற்கு வந்த சமயம் சைவர்களே நிறைந்திருந்தனர். ஜைன சமயத்தவர்களும் ஓரளவுக்கு அதிகமாக இருந்தனர். ராமானுஜர் வந்ததும் பலரையும் வைஷ்ணவர்களாக மாற்றினார். இன்றைக்கும் சைவர்களுக்கு அடுத்தபடி வைஷ்ணவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். இதற்கு அஸ்திவாரம் போட்டதே ராமானுஜர்தான். அவர் உத்தரவின்படி பேலூரில் (Belur) கட்டிய கலை நயம் நிறைந்த கோவிலில் ராமானுஜருக்கு தனி சன்னதி உண்டு. இன்று இக்கோவில் தொல் பொருள் காப்புத்துறையிடம் (Archaeological Department) உள்ளது.

இந்த சமயத்தில் கிருமி கண்ட சோழன் எனப்பட்ட குலோத்துங்க சோழன் இறந்து விட்டதாக கேள்விப் பட்டார். ஸ்ரீரங்கம் செல்ல ஏற்பாடுகள் செய்ய தன் சிஷ்யர்களிடம் கூறினார். 12 வருஷங்கள் அவருடன் இருந்த அன்பர்கள் அவர் போவதை முதலில் அனுமதிக்கவில்லை. ராமானுஜர் ஸ்ரீரங்கத்தில் தான் பாதியில் விட்டு வந்த வேலைகள் அப்படியே இருப்பதால் அவற்றை நிறைவேற்ற வேண்டிய அவசியத்தை கூறி விடை கொடுக்குமாறு கூறினார்.

அன்பர்களின் வருத்தத்தை போக்க ஒரு சிறந்த சிற்பியை கூப்பிட்டு தன்னைப் போலவே ஒரு சிலையை செய்யக் கூறி அதனை சம்பத்குமார் சன்னதிக்கு எதிரிலேயே தன் கையாலேயே பிரதிஷ்டை செய்தார். இதுவே அவரது முதல் சிலை. தமர் (அன்பர்கள்) உகந்த சிலை எனப்படும்.

இன்று மேல் கோட்டையில் 100 வருடங்களுக்கு மேல் ஆன ஒரு சமஸ்கிருத கல்லூரி உள்ளது. 28 வருஷங் களுக்கு முன்னால் ஒரு சமஸ்கிருத ஆராய்ச்சி மையமும் (Academy of Sanskrit Research Centre) உள்ளது. இந்த மையத்தில் 1,00,008 சமஸ்கிருத ஓலைச்சுவடிகளை பாதுகாத்து வருகிறார்கள்.

## ராமானுஜர் ஸ்ரீரங்கம் திரும்பி வருதல்

இது இவ்வாறு இருக்க ஸ்ரீ ரங்கத்திலிருந்து வந்த அன்பர்கள் சிலர் கிருமி கண்ட சோழனால், ஆழ்வான், பெரிய நம்பிகள் கண்களை இழந்ததையும் வழியில் பெரிய நம்பிகள் பரமபதம் அடைந்ததையும், கூற கேட்டு மிகவும் துயரடைந்தார். பிறகு தனது ஆச்சாரியார் பெரிய நம்பிக்கு ஸ்ரீ சூர்ண பரிபாலனம், மற்றும் அத்ய்யன உத்ஸவம் அயல் சாற்று முறை முதலியவற்றை செய்வித்து முடித்தார். பிறகு தனது சிஷ்யருள் ஒருவரான மாருதிசிறியஆண்டானை ஸ்ரீரங்கம் அனுப்பி கூரத்தாழ்வான் பற்றியும், ஸ்ரீ ரங்கத்தின் நிலை பற்றியும் தெரிந்து வர அனுப்பினார். அவரும் அவ்வாறே சென்று வந்து ஸ்ரீரங்கத்தின் நிலைமை சாதகமாக இருப்பதாக கூறினார். இதற்கிடையில் ராமானுஜர் மேல் கோட்டையில் 52 சிஷ்யர்களை தயார் செய்து கோவில் நிர்வாகங்களை செவ்வனே செய்ய ஏற்பாடுகள் செய்தார். தமர் உகந்த திருமேனி சிலையும் கோவிலுக்குள் பிரதிஷ்டை செய்து ஸ்ரீரங்கத்திற்கு சிஷ்யர்கள் வழியும் கண்ணீர்களுடன் விடை கொடுக்க 1090 (AD) ஆண்டு மேல் கோட்டையை விட்டு கிளம்பினார். அப்பொழுது அவருக்கு வயது 72. மாருதிஆண்டான், கூரத்தாழ்வான் கண்கள் இழந்த கதையை விவரமாக கூற அதை கேட்டதும் வருத்தப் பட்டுக் கொண்டே ஸ்ரீ ரங்கம் வருகிறார். வந்ததும் முதல் காரியமாக பெரிய பெருமான் திருவரங்கனை தரிசித்து கண்கள் குளமாக அவரது திவ்விய மங்கள உருவத்தை

உள்ளம் குளிர வெகுநேரம் பார்த்து மகிழ்ந்தார். பிறகு நேராக ஆழ்வானது திருமாளிகைக்கு வந்தார். தன்னை காக்க தன் கண்களையே இழந்த ஆழ்வானை அணைத்து ஆரத்தழுவி ஆனந்தக் கண்ணீர் விட்டார். ஆழ்வானும் நீண்ட நாளாக தன் குருவைக் காண முடியாத சோகத்தி லிருந்து மீண்டு, அவரின் பாதரவிந்த கமலங்களில் வீழ்ந்து வணங்கி, அவரது தாமரைப் திருப்பாதங்கள் இரண்டையும் தன் கண்ணீரால் கழுவினார். அவருக்கு பேச நா எழவில்லை. இந்தக் காட்சியைக் கண்ட அனைவரும் உணர்ச்சியை அடக்க முடியாமல் தங்கள் கைகளை கூப்பியபடி அழுதவாறு நின்றிருந்தனர். இவர்கள் அனைவரும் விட்ட கண்ணீர் அந்தத் தெருவையே நனைத்தது. கண்டவர் அனைவரும் **"என்னே குரு - சிஷ்ய பாவம்"** என்று வியந்து போற்றினர். ஆழ்வானை எதிராசர் கைத்தாங்கலாக அழைத்து மாளிகை உள் சென்றார். பிரிந்தவர் கூடினால் பேசவும் மாளுமோ! ஸ்ரீ பாஷ்யம் செய்த பாஷ்ய காரரும், ஸ்ரீ பாஷ்யம் எழுத உதவிய ஆழ்வானும், ஆனந்த பாஷ்யத்தில் மூழ்கினார்கள்.

*1091(AD)* வருஷம் ராமானுஜர் 3வது தடவை திருப்பதி செல்ல புறப்பட்டார். அவர் வழியில் வந்து கொண்டு இருக்கும்போது சில அன்பர்கள் சிதம்பரம் சித்திரக் கூடத்தில் உள்ள கோவிந்தராஜப் பெருமாள் மூலவர் சிலையை சைவனான சோழ ராஜா தூக்கி கடலில் எறிந்து விட்டான் என்றும் அங்குள்ள பக்தர்கள் உத்ஸவர் சிலையை திருப்பதிக்கு எடுத்து சென்று விட்டனர் என்றும் கேள்விப்பட்டார். மிகவும் அதிர்ச்சி அடைந்த அவர் உடனே நேராக திருப்பதிக்கு வந்து கீழ் திருப்பதியில் உள்ள கோவிந்தராஜ பெருமாள்

கோவிலில் சிதம்பரம் சித்திரக் கூடத்திலிருந்து கொண்டுவந்த கோவிந்தராஜர் உத்ஸவர் இருப்பது கேள்விப்பட்டு அந்தக் கோவிலுக்கு சென்று அங்கேயே அந்த உத்ஸவரை தானே பிரதிஷ்டை செய்வித்தார். பிறகு திருமலை வாஸன் வேங்கடேசப் பெருமாளை கண் குளிர தரிசனம் செய்து மகிழ்ந்தார். திருமலை கோவிலில் ஒரு விசேஷம் என்னவென்றால் பிரகாரம் சுற்றி வரும்போது அங்கு ராமானுஜர் சன்னதியை காணலாம். இந்த கோவிலில் ராமானுஜர் சன்னதி தவிர வேறு எந்த ஆழ்வார், ஆச்சாரியர்களுக்கும் சன்னதி கிடையாது. எல்லா ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் அவருக்குள்ளே அடக்கம் என்பதே காரணம். வரும் வழியிலே உள்ள க்ஷேத்திரங்களில் தரிசனம் செய்தபடி ராமானுஜர் ஸ்ரீ ரங்கம் வந்து சேர்ந்தார்.

இனி ராமானுஜருடைய ஆத்மார்த்த பிரதமசிஷ்ய-ராகிய கூரத்தாழ்வானுக்கு காஞ்சி தேவராஜப் பெருமாள் கண் கொடுக்கும் நிகழ்ச்சியை காண்போம். இதற்குமுன் கச்சியில் வீற்றிருக்கும், கேட்ட வரம், தரும் தேவாதி ராஜனைப்பற்றி பார்ப்போம்.

## ஆழ்வானுக்குக் கண் கொடுத்த அருளாளர்

தேவாதிராஜனுக்கு ஆல வட்டம் (விசிறி வீசுதல்) கைங்கர்யம் செய்து, அவருடனே தினமும் பேசும் சக்தி படைத்த திருக்கச்சி நம்பியின் பாட்டனார் பச்சை வாரணப்பெருமாள்தொண்டர் என்று பெயர். சென்னைக்கு அருகேயுள்ள பூவிருந்தவல்லியை அடுத்த தாசரதிப் பேட்டை என்ற ஊரில் ஸ்ரீமுதலியாண்டான் ஸந்நிதியில் இருக்கும் பெருமாளுக்கு ஹரித வாரணர் என்று பெயர். இவர் இந்தப் பெருமாளுக்கு தொண்டு செய்து கொண்டு வந்தார். இவர் பிறவிக் குருடர். இவரை திருக்கச்சி நம்பியின் தகப்பனார் என்றும் சிலர் கூறுவார்கள். இவரை வரதராஜப் பெருமாள் திருக்கச்சி நம்பியின் மூலம் வரவழைத்து அவருக்கு கண் பார்வை கொடுத்தருளி தன்னை தரிசிக்கும் ஆனந்தத்தையும் கொடுத்தார். இந்நிகழ்ச்சி ஸ்ரீ ஆளவந்தார் காலத்தில் நடந்தது. இந்நிகழ்ச்சியை ஆழ்வான் தனது சுந்தர பாஹுஸ்தவத்தில் 126ம் ஸ்லோகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

பிறவிச் செவிடரான ஒருவர் வரதரது அருளால் காது கேட்கப் பெற்றார் என்று காஞ்சி புராணம் கூறுகிறது. திருமுக்கூடலில் வசித்து வந்த இரட்டையர்கள் சங்கரர், லிகிதர் என்ற மகான்கள் தர்ம சாஸ்திரங்களில் புலமை பெற்றவர்கள். இவர்கள் எழுதிய தர்ம சாஸ்திர நூல்கள் மிகவும் பிரசித்தி பெற்றவை. இவர்களில் சங்கரர் கை, கால்கள் இல்லாதவர். லிகிதர் கண் பார்வை அற்றவர். வரதரது அருளால் இவர்கள் கைகால்களையும்,

கண்களையும பெற்று செய்யாறு என்னும் ஆற்றைக் கடந்து வந்து தேவராஜனைக் கண் குளிரக் கண்டதாக காஞ்சிபுராணம் கூறுகிறது.

பிறவியிலேயே ஏகமூகனான ஒருவன் வரதனை வேண்டிக் கொண்டு அதன் காரணமாக வாய் பேச வந்து மூககவி எனப் பெயர் பெற்று தேவாதிராஜனைப் பற்றி மந்தஸ்மிதசதகம் இயற்றினார். ஒரு அந்தண தம்பதியருக்கு இவரது அருளால் புத்திர பாக்கியம் பெற்றதாகவும், புராணத்தில் காணக் கிடைக்கிறது. சமீப காலத்தில் வாழ்ந்த தமிழ்ப் புலவர் அந்தககவி வீரராகவ முதலியார் என்பவர் இப்பெருமானை வழிபட்டு கண்களைப் பெற்றதாகக் கூறப்படுகிறது. அரசாணி பாலை வேங்கடாத்வரி ஸ்வாமிகள் கண் பார்வை மறையவே, அவர் இப் பெருமாள், பிராட்டியாரை கண்டு விஷ்ணு ஸகஸ்ரம் என்ற ஸ்தோத்திர நூலில் வரதரைப் பற்றி இருநூறு ஸ்லோகங்கள் பாடியதும் கண் பார்வையை பெற்றதாக கூறுவர்.

அத்திகிரியில் வீற்றிருக்கும் அருளாளப் பெருமாள் கேட்ட வரம் தரும் வரதர். கண்கள் வேண்டி வரதராஜப் பெருமாள் மீது ஒரு ஸ்தோத்திரம் பாடும்படி ஆழ்வானுக்கு ராமானுஜர் அன்புக் கட்டளையிட்டார். ஆழ்வானை அழைத்துக் கொண்டு காஞ்சீபுரம் வந்தடைந்தார். தேவப்பெருமாள் சன்னிதியில் அத்திகிரி அருளாளர் முன்பு, விசிஷ்டாத்வைத ஸ்தாபகர் ராமானுஜர் பக்கத்தில் இருக்க கூரேசர் ஸ்ரீவரதராஜ ஸ்தவம் பாடி மனமுருக வேண்டினார். ஸ்ரீவரதராஜ ஸ்தவத்திற்குக் கிடைத்த இந்தப் பெருமை வேறு எந்த ஸ்லோகங்களுக்கும் கிடைக்கவில்லை. ஆழ்வானின் அன்புக்கு அடிமையாகிய ஆண்டவன் என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். ஆழ்வானும், ஐயனே, இந்தத் துன்பம் சூழ்ந்த உலகத்தை மறுபடியும் காண

எனக்கு ஆசையில்லை. உன்னையும் என் குருவையும் எப்பொழுதும் காணும் ஞானக் கண் மட்டும் கொடுங்கள் என்று கேட்டார். உடனே ஆண்டவனும் பரமபதத்தில் வீற்றிருக்கும் பரமபத நாயகனாக ஆழ்வானுக்குக் காட்சி அளித்தார். இதைக் கண்டு ஆழ்வானும் ஆனந்தத்தில் மூழ்கினார். அருகில் இருந்த ராமானுஜரும் மறுபடியும் கண்கள் வேண்டும் என்று கேட்கும்படி வற்புறுத்தினார். மறுபடியும் தோன்றிய தேவராஜனிடம், நான் பெற்ற இன்பம் நாலூரானும் பெருக. அவனுக்கும் மோட்சம் கொடுக்க வேண்டும் என்று வேண்டினார். அதிர்ச்சியடைந்த ராமானுஜர் திடுக்கிட்டு அவரிடம் நீர் உமது கண்கள் இழந்ததற்குக் காரணமான அந்த அயோக்கியனுக்காக இரங்கி இவ்வாறு கேட்கலாமா? என்று வினவினார். அதற்கு ஆழ்வான், நாலூரான் சில காலம் எனக்குச் சிஷ்யனாக இருந்தவன். குருவுக்குத் தீங்கிழைத்தவன், நரகத்திற்குத் தான் போவான் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவனுக்கு மோட்சம் கிடைக்கவில்லை என்றால் அது அவனுக்கு குருவாகிய எனக்குத்தானே இழுக்கு. நான் கண்களை இழக்க வேண்டியது என் விதியாகும். அவன் அதற்கு ஒரு கருவியானான் என்று கூறினார். இது கேட்ட வரதரும் மகிழ்ந்து அவர் வேண்டியபடி, பெருமாளையும் தன் ஆச்சாரியனையும் காணும்படியான ஞானக்கண் அருளினார். ஆச்சாரியனையும், பெருமாளையும் ஆழ்வான் தரிசித்தபின் இருவரும் ஸ்ரீரங்கம் திரும்பினார்கள். அனைவரும் வரதரை கண் கொடுக்கும் பெருமாள் எனப் போற்றிப் புகழ்ந்தனர். ஸ்வாமி வேதாந்த தேசிகனும்,

> **“கச்சிதனில் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்**
> **கருதவரம் தரும் தெய்வப் பெருமான் வந்தார்.”**

என்று பாடியிருக்கிறார்.

## ஆழ்வான் பரமபதம் அடைதல்

திருவரங்கத்தில் ஒருநாள் ராமானுஜர் இல்லாத சமயம், சேவிக்க அரங்கனது சன்னிதி அடைந்தார் ஆழ்வான். தனது கடைசி காலம் நெருங்குவதை உணர்ந்த ஆழ்வான் அரங்கனை மனமுருகிப் பிரார்த்தனை செய்தார். எம்பெருமானே, சூதுவாதுகள் நிறைந்த இந்தக் கபட உலகத்தில் இனி மேலும் வாழ விருப்பமில்லை. நிலையான நித்ய சூரிகளுடன் சேர்ந்து என்றும் பரமபத நாதனைக் கண்டுகளிக்கும் பாக்கியம் எனக்கு அருள வேண்டும் என்று மனம் நொந்து வேண்டிக் கொண்டார். அரங்கனும் இனி ஆழ்வானை ஸ்ரீரங்கத்தில் காணும் பாக்கியம் தனக்கு இனி கிடைக்காமல் போகுமே என்று வருந்திய போதும், கடைசியாக அவர் கேட்ட வரத்தை அருளினார். அரங்கனும் அவரைப் பார்த்து **"ஆழ்வானே, நீர், எமக்கு ஆற்றிய சேவைக்கு மகிழ்ந்து உமக்குப் பேரின்பம் தரும் பரமபத வாழ்வினைத் தந்தோம். உமக்கு மட்டுமின்றி உம்முடைய சம்பந்தம் பெற்ற அனைவருக்கும் மோட்சம் கிடைக்கட்டும்"** என்று அருளிச் செய்தார்.

இதைக்கேட்ட எதிராஜர் கூறியதாவது: திருக் கோட்டியூர் நம்பியிடம் 18 முறை சென்று மோட்சத்தை அடைய வழிகாட்டும் பெரிய திருமந்திரத்தைப் பெற்றேன். அவரும் அதை உபதேசித்த பின்பு, இம்மந்திரத்தைக் தகுதியற்றவர்கள் யாருக்கும்

உபதேசிக்கக் கூடாது. அவ்வாறு உபதேசித்தால், இதைக் கேட்டவர்கள் மோட்சத்திற்கும் கூறிய நீ நரகத்திற்கும் போவாய் என்று உத்தரவிட்டார். யோசித்த ராமானுஜரும், இதன்மூலம் நான் ஒருவன் மட்டும் மோட்சத்திற்குப் போவதற்கு பதில், இதைக் கேட்ட நூற்றுக்கணக்கானவர்கள் மோட்சத்திற்குப் போவது மேலல்லவா? நான் நரகம் போனாலும் பரவாயில்லை என்று நினைத்து, திருக்கோட்டியூர் கோவில் கோபுரத்தின் மீதேறி நின்று எல்லா ஜனங்களையும் அழைத்து இந்த மந்திரத்தை உபதேசித்தார். ஆகவே இதுவரை தனக்கு நரகம் நிச்சயம் என்று நினைத்திருந்த ராமானுஜர், ஆழ்வானுக்கு அரங்கன் அளித்த வரத்தைக் கேள்விப்பட்டு ஆழ்வான் சம்பந்தம் உடைய எனக்கு நிச்சயம் மோட்சம் உண்டு, மோட்சம் உண்டு என்று கூறி தெருவிலேயே ஆனந்தக் கூத்தாடி மேலே உடுத்த காஷாயத்தை ஆகாயத்திலே வீசி எறிந்து பிடித்துக் கொண்டார் என்பது ஐதீகம். இந்த நிகழ்ச்சி ஆறாயிரப்படி குரு பரம்பராப்ரபாவ கிரந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தனக்கு மோட்சம் கிட்டும் என்று ஆனந்தக் கூத்தாடினாலும் ராமானுஜருக்கு ஆழ்வான் தன்னை விட்டுப் போகப் போகிறாரே என்று மிகவும் கவலைப் பட்டார். உடனே ஆழ்வான் திருமாளிகைக்கு வந்து, அவரைப் பார்த்து ஆழ்வானே என்ன காரியம் செய்து விட்டீர்கள். என்னை விட்டுப் பிரிந்து போக உமக்கு எப்படித்தான் மனம் வந்தது. பரமபத நாயகனுக்கும் நித்ய சூரிகளுக்கும் உமது வரவு பரமானந்தத்தைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் என்னைத்தான் வருத்தத்தில் விட்டுப் போகிறீர்கள் என்றார். அதற்கு ஆழ்வானும், ஸ்வாமி, பரமபதத்தில்

புதிதாக வருபவர்களை அங்குள்ள நித்ய சூரிகள் வரவேற்று அழைத்துக் கொள்வதுதான் வழக்கம். தாங்கள் முன் சென்று பிறகு நான் அங்கு வரும் போது தாங்கள் என்னை வரவேற்க வேண்டிவரும். தாங்கள் என் குரு. குரு சிஷ்யனை வரவேற்பது அபசாரமல்லவா? ஆகையால் நான் முன் சென்று தங்களை வரவேற்கத் தயாராக இருப்பேன் என்று கூறினார். என்னே குருபக்தி ஆழ்வானுக்கு. சிறந்த சிஷ்யன் என்பதற்கு உதாரணமாக ஆழ்வான் வாழ்ந்தார். ஆழ்வானுக்கு அப்பொழுது வயது 106. இராமானுஜரைவிட வயது மூத்தவர். ராமானுஜர் 120 வயது வரை வாழ்ந்தார்.

கடைசி நேரமும் வந்தது. எதிராஜர் திருமந்திரத்தை ஆழ்வான் காதில் ஓதினார். ஆழ்வான் தனது தலையைத் தனது சிறந்த சீடரான பிள்ளை பிள்ளை ஆழ்வான் மடியில் வைத்தார். தனது திருப்பாதங்களை, சாந்தமே உருக் கொண்டவரும், பொறுமைக்குப் பிராட்டியாருக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்டவரும், அனைவருக்கும் தயாகுணம் படைத்தவரும், கைபிடித்த நாளிலிருந்து கடமை வழுவாது கணவனுக்குக் குறிப்பறிந்து பணி விடை செய்த உத்தம பத்தினியுமான ஆண்டாள் மடியில் வைத்தார். அருகே ஒரு பக்கம் விசிஷ்டாத்வைதம் என்ற மதத்தை ஸ்தாபித்து, புறச் சமயவாதிகளை ஓட ஓட விரட்டியடித்து, பிரும்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் எழுதி வைணவ சமயத்தை வானுற ஓங்கி நிலைநாட்டிய ராமானுஜர் அமர்ந்திருக்க மறுபுறம், மிகச்சிறந்த ஸ்தோத்திரங்கள் பல எழுதி வைணவத்தின் புகழை எங்கும் பரப்பப் போகிறவருமான திருமகன் பராசர பட்டரும், மற்றொரு மகன் வேத வியாசபட்டரும், எம்பாரும், முதலியாண்டானும், நடாதூர் அம்மானும்

கண்ணீர் விட்டபடி நின்றிருந்தனர். தன் குரு ராமானுஜரைப் பார்த்தபடி தன் இரு கைகளையும் கூப்பியபடியே கூரத்தாழ்வான் பரமபதம் சென்று அடைந்தார். சிறந்த ஒரு குரு-சிஷ்ய சகாப்தம் முடிவுற்றது. இத்தகைய பாக்கியம் யாருக்குத்தான் கிடைக்கும்.

*ஸ்ரீ கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்*
*ஸ்ரீ ராமானுஜர் திருவடிகளே சரணம்*

## கூரத்தாழ்வான் குணாதிசயங்கள்

**ஸ்ரீரங்கம் மங்கள நிதிம் கருணா நிவாஸம்**
**ஸ்ரீவேங்கடாத்திரி சிகராலய காளமேகம்**
**ஸ்ரீஹஸ்தி சைல சிகரோஜ்வல பாரிஜாதம்**
**ஸ்ரீஸன் நமாமி சிரஸா எதிசைல தீபம்**

மேலே கூறிய ஸ்லோகத்தின்படி ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவருக்கும் ஸ்ரீரங்கம், திருமலை (திருப்பதி), காஞ்சீபுரம், திருநாராயணபுரம் (மேல்கோட்டை) இவை நான்கும் அவசியம் சேவிக்க வேண்டிய திவ்ய தேசங்கள் ஆகும். ஆழ்வானுக்கு இந்த நான்கு திவ்ய தேசங்களிலும் மிகச் சிறந்த தொடர்பு உண்டு. ஸ்ரீரங்கத்திலேயே வாசம் செய்து தினமும் அரங்கனையும், பிராட்டி அரங்க நாயகியையும் சேவித்து மகிழும் பாக்கியம் பெற்றவர். பிராட்டி மீது ஸ்ரீஸ்தவம் இயற்றி ஆனந்தமடைந்தவர். திருப்பதிக்கு ராமானுஜர் சென்று ஸ்ரீவைஷ்ணவச் சம்பிரதாயத்தை நிலைநாட்டியபோது உடன் சென்று அவருக்கு வலதுகரமாக உதவியவர் ஆழ்வான். ராமானுஜரின் ஆணைப்படி இழந்தக் கண்ணைப் பெறுவதற்குக் காஞ்சிபுரம் சென்று தேவாதி ராஜனிடம் 102 ஸ்லோகங்கள் கொண்ட வரதராஜ ஸ்தவம் பாடி

ஞானக்கண் பெற்றவர் ஆழ்வான். ராமானுஜரைக் காக்க வேண்டி, முதலாம் குலோத்துங்கசோழனின் அரச சபை சென்று, வைணவச் சம்பிரதாயத்தை நிலைநாட்டத் தன் கண்களை இழந்து, ராமானுஜரைத் தப்பிக்க வழி செய்து அவர் திருநாராயணபுரம் சென்று 12 வருஷங்கள் அங்குள்ள எம்பெருமான் சம்பத்குமாரன் என்னும் செல்லப்பிள்ளையைச் சேவித்து மகிழும் பாக்கியம் பெறக் காரணமானவர். மேலே கூறிய காரணங்களால் ஆழ்வானின் நான்கு திவ்ய தேசங்களுடனான சம்பந்தம் நன்கு புலப்படும்.

ஆழ்வான் பொறுமையின் பூஷணம். எவருக்கும் தீங்கு நினைக்காத நல்லவர். ஒரு நல்ல மனிதருக்கு ஒரு உதாரண புருஷராக விளங்கினார். மதுரகவி ஆழ்வார் எழுதிய “**கண்ணி நுண் சிறுத்தாம்பு**” என்ற ப்ரபந்தத்தில் 4வது பாட்டில் “**நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்**” என்று குறிப்பிடுகிறார். இதற்கு ஈட்டில் கூரத்தாழ்வானை உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது. எத்துணையோ ஆழ்வார்கள், ஆச்சாரியன்கள், வைணவப் பெரியார்கள் இருக்கும்போது ஆழ்வானை மட்டும் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது என்றால் இதிலிருந்து அவரது உயர்ந்த குணம் புலப்படுகிறது. இதுவே ஆழ்வானின் சிறப்பு.

ஒரு சமயம் ஆழ்வான் நடந்து சென்று கொண்டிருக்கையில், வயல் வழி ஓரமாக ஒரு தவளையை பாம்பு விழுங்கிக் கொண்டிருந்தது. அந்தத் தவளையோ இறக்கும் முன்பு பரிதாபமாகக் கத்திக் கொண்டிருந்தது. இதுகண்டு அவர், யார் தான் இந்தத் தவளையை காப்பார்களோ என்று நினைத்து மயக்கமாய் விழுந்தாராம். அவருக்கு அவ்வளவு மெல்லிய மனது.

மற்றொரு சமயம் ஒரு வாழைத் தோட்டத்தின் வழியே சென்று கொண்டிருந்தபோது ஒரு மரத்தில் அப்பொழுது தான் ஒருவன் வாழை இலை அறுத்துக் கொண்டு போயிருந்தான். அந்த அறுத்த இடத்தில் நீர் சொட்டிக் கொண்டிருந்தது கண்டு ஆழ்வார் மனம் பொறுக்காமல் மூர்ச்சித்து விழுந்தார் என்று கூறுவர்.

ஒரு சமயம் காவிரி ஆற்றங்கரை ஓரம் சென்று கொண்டிருக்கும்போது நீர் மொண்ட தண்ணீர் குடத்தை இடுப்பில் ஏற்றி வைக்க வழி தெரியாத ஓர் பெண்மணிக்கு குடத்தை எடுத்து வைக்க உதவினாராம்.

உடையவர் ஒருநாள் ஒரு ஊமையை அழைத்துக் கொண்டு மடத்திற்கு வந்தார். வந்தவர் நேராக தமது அறைக்குச் சென்றார். பிறகு அந்த ஊமையைப் பார்த்து, தன்னை விழுந்து வணங்கி தன் திருவடிகளை தலையிலே ஏற்கும்படி செய்கையால் கூற, அந்த ஊமையும் திருவடியே தஞ்சம் என்று உணர்ந்து அவ்வாறே செய்தான். இதை மறைவிலிருந்து பார்த்த ஆழ்வான், ஐயோ, இவ்வளவு சாஸ்திரங்களை கற்று என்ன பயன்? இந்த ஊமைக்கு கிடைத்த பாக்கியம் எனக்குக் கிட்டவில்லையே. நானும் ஒரு ஊமையாய் பிறக்காமல் போனேனே என்று வருந்தினாராம்.

இத்தகைய சிறந்த குணாதிசயங்களை கொண்ட கூரத்தாழ்வான் பரமபதம் அடைந்து நித்திய சூரிகளுடன் உள்ள பரமபத நாதனுடைய பாதாரவிந்த கமலங்களை அடைந்ததைப் பார்த்தோம். இனி பர்த்தாவுக் கேற்ற பதிவிரதையாகிய கணவன் மனம் நோகாது பணி விடை புரிந்த ஆழ்வானின் மனைவி ஆண்டாள் மற்றும் அவரது மகன்களான, அரங்கநாயகியின் மகனாகவே கருதப் பட்ட பெரிய குமாரன் பராசர பட்டர், ஸ்ரீராம பிள்ளை

என்று அழைக்கபட்ட வேத வியாச பட்டர் இவர்களைப் பற்றியும், ஆழ்வான் எழுதிய நூல்களைப் பற்றியும் பார்த்துவிட்டு மறுபடியும் ராமானுஜரின் கதைக்கு வருவோம்.

## ஆழ்வானின் மனைவி மகன்கள்

ஆழ்வானுக்கு அரங்கனது அருளால் அவர் அனுப்பிய பிரசாதத்தின் மூலம் இரட்டைக் குழந்தைகள் பிறந்ததை முன்பே பார்த்தோம். அக்குழந்தைகளுக்கு ஆளவந்தார் விரும்பியபடிப் பராசர பட்டர், வேத வியாச பட்டர் என்று ராமானுஜர் பெயர் சூட்டி மகிழ்ந்தார். கூரத்தாழ்வானின் மனைவிக்கு முதலில் ஒரு பெண் குழந்தை பிறந்து இறந்ததாக சில ஏடுகள் கூறுகின்றன. பிறகு பிறந்த பட்டராவது உயிருடன் ஜீவித்திருக்க வேண்டும் என்று விரும்பிய ராமானுஜர் பட்டரை ஸ்ரீரங்க நாச்சியாருக்கு அவரது புத்திரராக இவனை வளர்க்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டு கொடுத்ததால், அப்பெரிய பிராட்டியாரும் அவண்ணமே அவரைச் சீராட்டி வளர்த்ததாகத் திருவாசிரியம் முதற் பாட்டு வியாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளையால் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்தக் காரணத்தால் அனந்தாழ்வான், பட்டரைப் பெரிய பிராட்டியார் மகன் என்றே குறிப்பிடுவாராம். பெரிய பெருமாளும் பெரிய பிராட்டியாரும் தம் மடிகளில் இருத்திச் சீராட்டி வளர்க்கப் பெற்றதால் தனக்கு “ஸ்ரீரங்கராஜ ஸ்தவம்” அருளிச் செய்வதற்குத் துணிவு ஏற்பட்டதாகப் பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் பூர்வ சதகம் 17வது ஸ்லோகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஆழ்வானின் மனைவி ஆண்டாளுக்கு தன் குமாரர்களுக்கு திருமண வயது வந்துவிட்டது குறித்து மிகவும் வருந்தினாள். ஆழ்வானிடம் இதுபற்றி அடிக்கடி கூறி வந்தார். ஒருநாள் ஆழ்வானும் தான் கோவிலுக்கு பெருமாளை சேவிக்க செல்லும்போது குமாரர்கள் உடன் அனுப்பும்படிக் கூறினார். அவ்வாறே சென்று பெருமாளைச் சேவித்த பிறகு தயங்கி, தயங்கி நிற்பது கண்டு பெருமாள் "ஆழ்வானே என்ன விஷயம்" என்று கேட்க, அவரும் தயங்கியபடி விஷயத்தைக் கூறினார். பெருமாளும் ஆவது செய்வதாக கூறினார். உடனே அரங்கன் பெரிய நம்பியின் உறவினர் ஒருவர் கனவில் தோன்றி, ஆழ்வான் குமாரர்களுக்கு தங்களது இரு குமாரத்திகளையும் மணம் முடிக்குமாறு கூறினார்.

அவரும் இதையே தலையாய வாக்காககருதி ஆழ்வானுடன் சம்பந்தம் பேசி திருமணத்தை முடித்து வைத்தார். பட்டர் பிற்காலத்தில் ஸ்ரீரங்கராஜ ஸ்தவம், ஸ்ரீ குண ரத்ன கோசம், ஸ்ரீரங்கனாத ஸ்தோத்திரம், அஷ்ட ஸ்லோகி முதலிய ஸ்லோகங்களை அருளிச் செய்தார். சிறந்த கல்விமானாக இருந்ததோடல்லாமல், தன் வாதத்திறமையால் புறச் சமயவாதிகளை வாதத்தில் தோற்கடித்துப் புறமுதுகிட்டு ஓடச் செய்து வைணவச் சமயத்தின் புகழை உலகெங்கும் உயரச் செய்தார்.

கூரத்தாழ்வான் மனைவி பெயர் ஆண்டாள் என்பது. இவர் அறிவில் சிறந்தவராக விளங்கினார். ஆழ்வானுக்கு சாஸ்திரம், சம்பிரதாயங்களில் சந்தேகம் ஏற்படும் போதெல்லாம் அவர் ஆண்டாளை தான் முதலில் கேட்பாராம். தன் கணவனிடம் அன்பும் பக்தியும் உடையவராய் அவருக்கு வலதுகரமாக இருந்தார். ராமானுஜர் வைகுண்டம் சென்றபிறகு கோவில்

நிர்வாகத்தில் சிலர் தலையிட்டு ஆதாயம் தேட முற்பட்டனர். கோவில் நிர்வாகமும் சீர்கெட ஆரம்பித்தது. இதுகண்டு ஆண்டாள் மிகவும் வருந்தினார். உடனே கூரநாராயணன் ஜீயரை வரவழைத்து தற்போதுள்ள ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடத்தை ஸ்தாபனம் செய்து கோவில் நிர்வாகங்களை கவனித்துவர ஏற்பாடு செய்தார். கோவில் நிர்வாகமும் அழிவிலிருந்து காக்கப்பட்டு சீரடைந்தது. இதற்கு பெரும் துணையாக இருந்து செயலாற்றியவர் ஆழ்வானின் மனைவியே ஆகும்.

கூரத்தாழ்வான் காலத்திற்குப் பிறகு அவரது மனைவியும், மகன்களும் ஸ்ரீரங்கத்திலேயே தொடர்ந்து வாசம் செய்து வந்தனர். திருச்சியை ஆண்ட வீர சுந்தர பிரம்மராயன் என்னும் அரசன் முன்பு சில காலம் கூரத்தாழ்வானிடம் கல்வி கற்றவன். ஆழ்வான் காலத்திற்குப் பிறகு அரங்கரது திருக்கோவிலுக்கு மதில் கட்ட ஆரம்பித்தான். மதில் சுவர் கட்டும் வழியிலே ஓரிடத்தில் ஆழ்வானின் மற்றொரு சீடரான பிள்ளை பிள்ளை ஆழ்வான் என்பவரது வீடு இருந்தது. மதில் சுவர் கட்டும் வழியில் உள்ள அந்த வீட்டை இடித்து விட்டுச் சுவர் கட்ட அரசன் விரும்பினான். இதை அவன் பட்டரிடம் தெரிவித்தான். முன் ஒரு காலத்தில் திருமங்கை மன்னன், அரங்கன் கோவிலுக்கு மதில் சுவர் கட்டும்போது வழியில் விப்ர நாராயணர் என்ற தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருமாளிகை இருப்பது கண்டு, அந்த இடத்தை ஒதுக்கிவிட்டு, அவரது வீட்டை இடிக்காமல் அதைச் சுற்றி மதில் சுவர் கட்டினார். பட்டர் இந்த உதாரணத்தை அரசனுக்கு எடுத்துக்காட்டி, அவ்வாறே பிள்ளை பிள்ளை ஆழ்வாரது வீட்டை ஒதுக்கி

சுவர் கட்டும்படிக் கேட்டுக் கொண்டார். வீரசுந்தரன் பட்டரது பேச்சைக் கேட்காமல் வீட்டை இடித்து மதில் சுவரைக் கட்டினான். தன்னை எதிர்த்தால் பட்டர் மீது கோபம் கொண்டு, அவர் தனது ஆசார்யரது புத்திரன் என்று பாராமல் பலவகைகளில் பட்டருக்கு துன்பம் கொடுத்து வந்தான். அரசனது தொல்லை அளவுக்கு மீறிப் போகவே பட்டர் ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியேறி திருக்கோட்டியூர் சென்று அங்கு வாழ்ந்து வரலானார். அரங்கனை மறுபடியும் எப்பொழுது தரிசிப்பேனோ என்று ஏங்கிக் காலங்கடத்தி வரலானார்.

சில தினங்களில் அரசன் வீரசுந்தரன் இறந்து போகவே, ஸ்ரீரங்கத்தில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாம் பட்டரது விரோதி இறந்தான் என ஆனந்தக் கூத்தாடி மகிழ்ந்தனர். அரசன் இறந்த செய்தி கேட்டு ஆழ்வானின் மனைவி ஆண்டாள், தன் திருமாளிகைக்குச் சென்று தன் அறையின் கதவைச் சாத்தி தாளிட்டுக் கொண்டு "ஓ" வென்று வாய்விட்டுக் கதறி அழுதாள். இதைக் கண்டவர்கள் தன் மகனைத் துன்புறுத்தி ஊரை விட்டே ஓடச் செய்த விரோதி ஒழிந்தான் என்று சந்தோஷப்படாமல் இப்படிக் கதறி அழுகிறாரே என்று நினைத்தனர். தன் மகன் திரும்பி வந்து தன்னுடன் சேர்ந்து வாழப் போகிறான் என்ற சந்தோஷம் சிறிது கூட இல்லையே என்று நினைத்து அவரிடம் அழுததற்குக் காரணம் கேட்டனர். அதற்கு அவர் வீரசுந்தரன் ஆழ்வானின் சீடன். ஏதோ மூளை கெட்டுப் பட்டரிடம் பெரிய அபசாரம் செய்து விட்டான். இதனால் இறந்தபின் அவன் நிச்சயம் நரகத்தில் இடப்பட்டுக் கடும் துன்பத்தை அனுபவிக்கப் போகிறான். ஆழ்வானின் திருவடிகளைச் சேர்ந்து அவரிடம் சிஷ்யனாக இருந்த ஒருவன் இவ்வாறு

கொடுமைகளை அனுபவிக்கப் போகிறானே என்று நினைக்க என் மனம் மிகுந்த வேதனைப்படுகிறது. ஆழ்வானின் சிஷ்யனுக்கு நேர்ந்த கதி கண்டு என் வயிறு எரிகிறது. ஆகவேதான் அழுகிறேன் என்று அந்த உத்தமி கூறினாராம்.

ஆழ்வானின் மனைவியல்லவா? நாலூரான் நரகம் போவானே என்று வருந்தினார் கணவன். மனைவியோ அதே காரணத்திற்காக வீரசுந்தரனுக்காக அழுதார். ஆழ்வானுக்கேற்ற மனைவி. அரசன் இறந்த செய்தி கேட்டுப் பட்டரும் திரும்பி ஸ்ரீரங்கம் வந்ததும் பிரிந்த குடும்பம் மீண்டும் ஒன்று சேர்ந்தது.

இளம் வயதிலேயே பட்டரும் தனக்குப் பரமபதம் செல்லும் நாள் வந்ததை உணர்ந்தார். தாயார் ஆண்டாளிடம் சென்று சேவித்து விஷயத்தைக் கூறினார். அவரும் வைகுண்டம் சென்று பரமபதநாதனின் பாதங்களைச் சென்றடைவாய் என்று ஆசீர்வாதம் செய்தார். குறிப்பிட்ட சமயம் வந்ததும் தமது இளம்பிராயத்திலேயே பட்டர் பரமபதம் சென்றடைந்தார். தாயார் சிறிதும் மனம் கலங்கவில்லை. உடையவன் உடமையைக் கைக் கொண்டால் நாம் வெறுக்கலாமோ என்றார். எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு திருமாளிகை திரும்பியதும் வீடு வெறிச்சோடிக் கொண்டிருந்ததைக் கண்ட பட்டரின் திருத்தம்பி சீராமப் பிள்ளை (வேத வியாச பட்டர்) வாய்விட்டு அழுதார். இதைக் கண்ட தாய் ஆண்டாள் இவன் ஆழ்வானின் பிள்ளையே அல்ல என்று கோபித்துக் கொண்டு மகனே பட்டர் பரமபதம் சென்றடைந்தார். அவர் உயர்ந்த பதவியை அடைந்ததைப் பொறுக்காது பங்காளிக்

காய்ச்சல் கொண்டு அழுகிறாயா? என்று கேட்டார். இதைக் கேட்ட சீராமப் பிள்ளை தாயின் காலடியில் வீழ்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்டார். இதிலிருந்து ஆண்டாள் எத்தனை மனோதிடமும் நம்பிக்கையும் தெளிந்த ஞானமும் கொண்டவர் என்பது புலப்படுகிறது.

வைஷ்ணவச் சித்தாந்தத்திற்காகத் தன் கண்களை இழந்தவர் ஆழ்வான். அதே வைஷ்ணவச் சித்தாந்தத்தை உலகெங்கும் பரப்பி அதை உயர்ந்த பீடத்தில் அமர்த்தியவர் அவரது திருமகன் பட்டர் ஆவார்.

**"தோன்றின் புகழுடன் தோன்றுக அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று."**

என்பதற்குப் ஏற்ப ஆழ்வானும் அவரது குமாரரும் புகழுடன் தோன்றி வாழ்ந்து மறைந்தனர்.

ஒரு தந்தையானவர் தன் மகனுக்குச் செய்யும் உதவி எது என்று கேட்டால், அவனைக் கல்வி, கேள்விகளில் நன்று பயிலச் செய்து, எந்த மேடையில் அவன் ஏறினாலும் அவனை வெல்ல யாரும் முடியாது என்று அனைவரும் போற்றும்படி அவனை வளர்க்க வேண்டியதாகும்.

**"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்"**

என்று உரைக்கிறது குறள்.

அதற்குப் பிரதி உபகாரமாக மகன் தந்தைக்குச் செய்ய வேண்டிய உதவியானது அவனது வளர்ச்சியை கண்டு உலகத்தோர் ஆஹா, இத்தகைய அறிவுடைய மகனைப் பெற்ற தந்தை போன ஜென்மத்தில் என்ன

தவம் செய்து இந்த மகனை ஈன்றெடுத்தாரோ என்று புகழும்படி, பெருமைப்படும்படி வாழ்ந்து காட்டுதல் ஆகும்.

இதனையே வள்ளுவர்

**"மகன் தந்தைகாற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோற்றான்கொல் எனுஞ் சொல்"**

என்கிறார்.

ஆழ்வானும், பட்டரும் அவ்வாறே வாழ்ந்துக் காட்டினார்கள். தந்தை, மகனுக்கு சிறந்த உதாரணமாக வாழ்ந்தார்கள்.

### ஆழ்வான் எழுதிய நூல்கள்

ஆழ்வான் பல நூல்கள் எழுதியிருக்கிறார். அதில் தற்போது நமக்கு கிடைத்திருப்பவை - பஞ்சஸ்தவம் எனப்படும். ஸ்ரீஸ்தவம், ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமானுஷ்ய ஸ்தவம், சுந்தர பாஹு ஸ்தவம், வரதராஜஸ்தவம் என்ற ஐந்து ஸ்லோகங்கள். இதில் ஸ்ரீஸ்தவம் ஸ்ரீரங்கத்தில் கோவில் கொண்டுள்ள பெரிய பிராட்டியாரான ரங்கநாயகித் தாயாரைப் பற்றிய ஸ்லோகங்கள் அடங்கியதாகும். அடுத்து 101 ஸ்லோகங்களைக் கொண்ட ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம். ஸ்ரீவைகுண்ட ஸ்தவம் தெரியாதவன் ஸ்ரீ வைஷ்ணவனே அல்ல என்ற பழமொழியே உண்டு. கிரந்தங்களில் இலைமறைவாய், காய் மறைவாய் உள்ள சாஸ்திரங்களின் அர்த்தத்தை ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் விளக்கி யுள்ளார். அடுத்து 61 ஸ்லோகங்களைக் கொண்ட அதிமானுஷ்ய ஸ்தவம், பெருமாள் தன்னை மனிதனாகப் பாவித்து ராமாவதாரம்,

கிருஷ்ணவதாரம் மற்றும் உள்ள அவதாரங்களில் மனிதர்களால் செய்ய முடியாத அதிமானுஷ்ய செயல்களை விளக்கியுள்ளார். சுந்தர பாஹு ஸ்தவத்தில் உள்ளது 132 ஸ்லோகங்கள். திருமாலிருஞ்சோலை எனப்படும் அழகர் கோவிலில் வீற்றிருந்து அருள் பாலிக்கும் அழகரைத் தான் மிகவும் அனுபவித்து எழுதிய ஸ்லோகங்களாகும். ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்காகத் தன் கண்களை இழந்த பிறகு ராமானுஜர் ஆணைப்படித் தனக்கு இழந்த கண்கள் மீண்டும் கிடைக்கும்படி வரதராஜ பெருமாளிடம் வேண்டி எழுதிய 102 ஸ்லோகங்கள் ஸ்ரீவரதராஜ ஸ்தவம் ஆகும். மற்ற எல்லா நூல்களிலும் கிடைக்காத பெருமை ஸ்ரீவரதராஜ ஸ்தவத்திற்கு உண்டு. ஸ்ரீவைஷ்ணவச் சித்தாந்த ஸ்தாபகராகிய ராமானுஜர் முன்பு இருக்க ஆழ்வான் பெருமாளைப் பற்றி பாட அவர் எதிரே காட்சியளித்த பெருமை இந்நூலுக்கு உண்டு. பஞ்ச ஸ்தவத்தில் ஆழ்வானின் நடை இலக்கண வரம்புக்கு உட்பட்டு சொற்சுவை சிறக்க எழுதியுள்ளதாக அறிஞர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்.

ஸ்ரீஆளவாந்தாரைப் போல, சம்பிரதாய சாஸ்திரங்களைச் சேர்த்து அனுபவப்பூர்வமாக முதன் முதலாக ஸ்தோத்திரங்களை அருளிச் செய்தவர் கூரத்தாழ்வாரே ஆவர். இந்த வழியைப் பின்பற்றி அவரது மகன் பட்டரும், ஸ்வாமி தேசிகனும் திறமையுடன் பல நூல்கள் எழுத வழிகாட்டியவர் ஆழ்வான் என்று அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள்.

ஆழ்வான் சுமார் 15 நூல்கள் இயற்றியதாகத் தெரிய வருகிறது. இவற்றில் பஞ்ச ஸ்தவம் தவிர மற்ற ஓலைச் சுவடிகள் காலப் போக்கில் சரியாகத் பாதுகாக்கத்

தவறியதால் அழிந்து விட்டன. ஆனால் அவருக்கு பின் வந்த மகான்கள் எழுதிய நூல்களில் ஆழ்வானின் ஸ்லோகங்கள் சில மேற்கோள்களாக எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. ஸ்ரீஸ்வாமி தேசிகன் காட்டிய மேற் கோள்கள்படி ஆழ்வான் ''அபிகமனஸாரம்'' என்ற நூலும் ''சரம ஸ்லோகவ்யாக்யானம்'' என்ற நூலும் எழுதியதாகத் தெரிய வருகிறது. இது தவிர ''சாரீக ஸாரம்'' என்ற நூலும் இவர் எழுதியதாக ஒரு குறிப்பில் தெரிய வருகிறது. எங்கள் ஆழ்வான் எழுதிய நூலிலிருந்து "புருஷ ஸூக்த பாஷ்யம்" ஆழ்வான் அருளி செய்ததாக தெரிகிறது. பராசர பட்டர் எழுதிய சஸஹ்ர நாம பாஷ்யத்திலும் ஆழ்வான் எழுதிய ஒரு ஸ்லோகம் மூலம் ஒரு நூலை எழுதியிருக்கலாம் என்று ஊகிக்க முடிகிறது. இதுதவிர நமது ஸ்ரீவைஷ்ணவக் குடும்பங்களில் விவாஹம் முதலிய நல்ல காரியங்களில் எல்லாராலும் பாடப்படும்.

**''லஷ்மி கல்யாண வைபோக மே''**
**''மடியி லெடுத்துப் பாலகனை''**
**'' ஸ்ரீராமாஜெய ஜெய'**
**'' லாலி, ஊஞ்சல்''**

என்பன போன்ற பாசுரங்களும் ஆழ்வான் அருளிச் செய்தவையாகும். இவைகளைப் போலக் கல்யாணத்தில் பச்சை பூசும் போது ஆண்டாளின் ''வாரணமாயிரம்'' பதிகத்தைப் பாடும் படியான ஏற்பாடுகளையும் செய்தவர் ஆழ்வானே ஆவார்.

திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழியின் கீழ்கண்ட தனியன் ஆழ்வான் அருளிச் செய்ததாகும்.

**''நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி**
**நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ் நன்னூல் துறைகள்**
**அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப்**
**பஞ்சுக் கனலின் பொறி பரகாலன் பனுவல்களே''**

''கூரே விஜயமும், யமகரத்னாகரமும் ஆழ்வான் அருளிச் செய்வதாக வழக்கத்தில் இருந்தாலும், இவை இரண்டும் ஆழ்வானின் வழித்தோன்றல்களால் எழுதி இருக்க வேண்டும். அவரது வம்சத்தில் தாத்தாவின் பெயர் பேரனுக்கு வைப்பது போல் அவரது வம்சத்தில் வந்த ஒரு ஆழ்வானால் எழுதியிருக்க வேண்டும். கூரேச விஜயத்'' தில் ஒரு ஸ்லோகத்தில் வேத பாஷ்யகாரரான வித்யாரண்யரைப் பற்றி மிகத் தெளிவாக வருகிறது. வித்யாரண்யர் பிற்பட்ட நூற்றாண்டைச் சேர்ந்தவர். ஸ்வாமி தேசிகன் காலத்தில் வாழ்ந்தவர். ஆகவே இந்நூலை ஆழ்வான் எழுதியிருக்க முடியாது என்று கூறுவர்.

இங்கே குறிப்பிட்ட ஆழ்வாரைப் பற்றிய பல நூல்களைப் பற்றி நான் அறிந்த போது ஆழ்வானின் மீதுள்ள மதிப்பும் பக்தியும் பலமடங்கு உயர்ந்தது. இதன்மூலம் ஆழ்வானி முழுமையாக காண என்னால் முடிந்தது.

**"மொழியைக் கடக்கும் பெரும் புகழான் வஞ்சமுக்குறும்பாம்**
**குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்"**

என்று ஆழ்வானின் சிஷ்யர் திருவரங்கத் தமுதனார், தான் எழுதிய ராமானுஜநூற்றந்தாதியில் குறிப்பிட்டுள்ளார். முக்குரும்பாகிய குழி என்பது கல்விச் செருக்கு தனச் செருக்கு, குலச் செருக்கு என்பதாகும். கல்விச் செருக்கற்றவர் என்பது ஆழ்வான் சீடனாகவும் கற்பவர்

குருவாக இருந்த நிகழ்ச்சியின் மூலம் அறிந்தோம். தனச் செருக்கற்றவர் என்பது தன் செல்வங்களை எல்லாம் தானம் செய்து உடுத்திய ஆடைகளுடன் ஸ்ரீரங்கம் வந்த நிகழ்ச்சியில் காணலாம். ராமானுஜர் ஆணைப்படி பெரிய நம்பியின் பின் தொடர்ந்து பணியாள் போல அரங்கனது திருக்கோலைச் சுற்றி வந்ததிலிருந்து அவர் குலச்செருக்கற்றவர் என்று புரியும். அவ்வாறே ஆழ்வான் மண், பெண், பொன் ஆசையை ஒழித்தவர். தான் ஆண்டு வந்த ராஜ்ஜியத்தையே வெறுத்து ஒதுக்கி ராமானுஜரைச் சரணடைந்தார். ஆகவே இவர் மண் ஆசையற்றவர். பெண்ணாசையற்றவர் என்பதை இவரது திருமணக் கதையே புலப்படுத்தும். பொன்னசை யற்றவர் என்பது தனது திரண்ட செல்வங்களை எல்லாம் வரதராஜப் பெருமாள் கேட்ட ஒரு கேள்விக்காக தானம் செய்து விட்டு மனைவியை அழைத்துக் கொண்டு கூரத்தை விட்டு வெளியேறியதிலிருந்து புலப்படும்.

அஷ்டப் பிரபந்தம் முதலிய நூல்களை எழுதியவர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்பவர். இவருக்கு ஆசார்யர் பட்டர். திருவரங்கத்து அமுதனார், பிள்ளை பெருமாள் ஐயங்காருக்கு நண்பர். அவர் ராமானுஜரின் திருவடிகளை வந்தடைய கூரத்தாழ்வான் பெரும் உதவி செய்தார். அஷ்டப் பிரபந்தம் கற்றவன் அரைப்பண்டிதன் என்று புகழ்வார்கள். பெரும் புலமையும், தமிழை இலக்கண சுத்தமாகக் கையாள்வதில் தன்னிகரற்றவர் என்று கூறப்படுவர். அரங்கனது திருவடிகளை விட்ட கலாது வாழ்ந்தவர். ஒரு சமயம் திருமலைவாசன் திருவேங்கடத்தான், ஐயங்கார் கனவிலே தோன்றி, அரங்கம் வாழ் அரங்கனையே பாடிக் கொண்டிருக் கிறாயே என்னைப் பற்றியும் பாடு, கேட்க ஆவலாக

இருக்கிறேன் என்று கேட்டார். அதற்கு பதிலாக ஐயங்கார் அரங்கனைப் பாடிய இந்த வாயால் இந்த குரங்கனைப் பாட மாட்டேன் என்று கிண்டலாக பதில் கூறினார். குரங்குகள் வசிக்கும் திருமலையில் வாழும் ஏழுமலை வாசனை குரங்கன் என்று குறிப்பிட்டார். இதைக் கேட்ட கோவிந்தன் கோபம் அடைந்து அவரது கர்வத்தை அடக்க சூலை நோய் என்னும் தீராத வயிற்று வலியினை அளித்தார். வலியால் துடி துடித்த அவர் அரங்கன் பாதத்தில் வீழ்ந்து வலியைப் போக்குமாறு வேண்டினார். அரங்கனும் எல்லா தெய்வங்களும் விஷ்ணுவின் அம்சம் என்று தெளிவுப் படுத்தி திருமலை வாசனிடம் சென்று பாடல் பாடி மன்னிக்க வேண்டுமாறு கூறினார். ஐயங்காரும் அவ்விதமே செய்த போதும் சமாதானம் அடையாத பெருமாள் இவருக்கு நன்கு உணர்த்தும் பொருட்டு 108 திருப்பதிகளிலும் உள்ள தெய்வங்களைப் பற்றிப் பாடினால்தான் உன் வலி தீரும் என்று கூற, ஐயங்காரும் "108 திருப்பதி அந்தாதி" என்ற நூல் இயற்ற, வலி நீங்கப் பெற்றார் என்று ஒரு கதை உண்டு. அத்தகைய சிறப்பு பெற்ற பிள்ளை பெருமாள் ஐயங்கார் கூரத்தாழ்வானைப் பற்றி **"அந்தமில் பேரின்பத்து அழிவில்லாத பெரு வீட்டில், அழிவில்லாத உடல் பெற்று வாழும் பரமாசாரியரான கூரத்தாழ்வான் திருவடிகளை எப்பொழுது கூடுவேன்"** என்று பாடுகிறார்.

**"முக்கால மில்லா முகில் வண்ணன் வைகுந்தத்து**
**எக்காலம் செல்வானிருக்கின்றேன் - தக்காரென்**
**கூரத்தாழ்வானடியை கூடுதற்கு நாயடியேன்**
**போரத்தாழ்வான் சடம் போட்டு"**

ராமானுஜருக்கும் கூரத்தாழ்வாருக்கும் உள்ள உறவு சிறந்த குருசிஷ்ய உறவுக்கு ஓர் உதாரணமாகும்.

ராமானுஜர் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயங்களை ஸ்தாபிக்க அவருக்கு வலது கரமாக விளங்கியவர் ஆழ்வான். அவரது உதவியின்றி ராமானுஜர் பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதி, தான் ஆளவந்தாருக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றி இருக்க முடியாது. ஸ்ரீபாஷ்யத்திலும் பல இடங்களில் ஆழ்வானின் நடை தெளிவாக காணப்படுவதாக கற்றறிந்த பெரியோர்கள் கூற கேட்டிருக்கிறேன். வைஷ்ணவத்திற்காக கண்களை இழந்ததுடன் தன் கண்கள் இழக்க காரணமாக இருந்தவனுக்கும் வைகுண்ட பதவி அளிக்க ஆண்டவனை வேண்டிய உத்தமர் அவர்.

## ராமானுஜர் பரமபதம் அடைதல்

நாம் மறுபடியும் ராமானுஜர் கதைக்கு வருவோம். கூரத்தாழ்வானின் பிரிவு ராமானுஜருக்கு பெரிய சோகத்தை கொடுத்து மட்டுமின்றி மனதில் பெரிய வெற்றிடத்தை ஏற்படுத்தியது. ஆழ்வான் சிஷ்யரான போதும் அவரின் அறிவுக்கு மதிப்பு கொடுத்து அவரை வாருங்கள், அமருங்கள் என்று மரியாதையை குறிப்பிடும் சொல்களால்தான் அழைப்பார். ஆழ்வானும் இதை சாதகமாக எடுத்துக்கொண்டு தான் சிஷ்யன் என்ற நிலை தவறாது குருவுக்கு தரவேண்டிய மரியாதை குறையாது நடந்து வந்தார். சிறிது காலம் செல்ல ராமானுஜர் தன் மனதை தேற்றிக்கொண்டு நமது சம்பிரதாயத்தைக் காக்க செய்ய வேண்டிய செயல்களில் இறங்கினார். 74 சிம்மாசனாதிபதிகளை ஏற்படுத்தி அதற்குத் தகுந்த சிஷ்யர்களை நியமனம் செய்தார். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பொறுப்புகளையும் கொடுத்தார். அவருக்கு வயது 120தை நெருங்கிக்

கொண்டிருந்தது. அந்த தள்ளாத வயதிலும் நித்யானுஷ்டான கர்மங்களை விடாமல் கடைபிடித்து ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் வாழ வேண்டிய வழிமுறைகளைக் காட்டினார். குளிக்க காவேரி கரைக்கு செல்லும்போதும், வரும்போதும் இரண்டு சிஷ்யர்களை கைத்தாங்கலாக பிடித்தபடியே மெதுவாக சென்று வருவார்.

ராமானுஜரும் தன் உடல் தளர்வதை உணர்ந்தார். அரங்கனது கோவில் சென்று அவரை மனமுருகி பிரார்த்தித்தார். பரமபத நாதனின் பாதாரவிந்தங்களை சென்றடைய அனுமதிக்கும்படி வேண்டினார். அரங்கனும் அவர் ஆற்றிய தொண்டுகளை நினைத்து அவருக்கு மோட்சம் கொடுக்க எண்ணி இன்னும் ஏழு நாட்களில் நீவிர் பரமபத நாயகனை சென்றடைவீர் என்று வாழ்த்தினார். இந்த ஏழு நாட்களில் தனது எல்லா சிஷ்யர்களுக்கும் தனக்கு தெரிந்த ரஹஸ்யார்த்தங்களை எல்லாம் உபதேசித்தார். ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய வழிமுறைகளையெல்லாம் வரையறுத்துக் கூறினார்.

அதுசமயம் முதலியாண்டான் மகன் கந்தாடையாண்டான் ராமானுஜரிம் வந்து தங்களது ஊராகிய ஸ்ரீபெரும்பூதூரில் ராமானுஜரின் திருவுருவத்தை செதுக்கி அருளும்படி வேண்டிக்கொண்டார். ஒரு சிறந்த சிற்பியைக் கொண்டு அவரைப் போலவே கருணைப் பொழியும் முகத்துடன் ஒரு சிலையை செய்து பிரதிஷ்டை செய்ய நாளும் குறித்துக் கொடுத்தார். அந்த சிலையை தான் தனது மார்போடு அணைத்து தன் சக்தியை அந்த சிலைக்கு அளித்தார். ஸ்ரீபெரும்பூதூரில் அந்த சிலையை பிரதிஷ்டை செய்த சமயம் ஸ்ரீரங்கத்திலிருந்த ராமானுஜர் தன் உடலில் சக்தி மேலும்

குறைவதை உணர்ந்தார். இதுவே அவரது இரண்டாவது திருமேனி. இதுவே தான் உகந்த திருமேனி ஆகும்.

ஸ்ரீரங்கத்தில் அந்த நாள் நெருங்க நெருங்க ஊரில் உள்ள எல்லா சிஷ்யர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் துக்கத்தில் ஆழ்ந்தார்கள். தங்களுக்கெல்லாம் நல்ல வழிகாட்டியாக இருந்த ராமானுஜர் தங்களை விட்டு போகப்போகிறார் என்று எண்ணி கண்ணீர் உகுக்காதவர்களே இல்லை. ஸ்ரீரங்கத்து ஆஸ்திகர்கள் எல்லாரும் அவரிடம் வந்து தங்களுக்கும் அவரது சிலை ஒன்றை அளிக்கும்படி வேண்டிக் கொண்டனர். அவரும் அவரது வேண்டுகோளை பெரிய பெருமானிடம் கூற அவரும் சந்தோஷத்துடன் அனுமதி அளித்து அவரது சிலையை கோவிலில் உள்ள வசந்த மண்டபத்தில் பிரதிஷ்டை செய்யுமாறு உத்தரவு கொடுத்தார். அதன்படியே பக்தர்கள் விரும்பியபடி கோவிலுக்குள் உள்ள வசந்த மண்டபத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்த சிலை அவரது மூன்றாவது சிலை. தாமாகிய திருமேனி என்று அழைக்கப்படுகிறது. முதல் சிலை திருநாராயணபுரத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிலை. தமர் உகந்த திருமேனி எனப்படும். இரண்டாவது அவரே தான் கட்டிணைத்த ஸ்ரீபெருமதூரில் அவருக்கு உகந்த திருமேனி. தாம் உகந்த திருமேனி எனப்படும். மூன்றாது ஸ்ரீரங்கத்தில் வசந்த மண்டபத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட தாமாகிய திருமேனி ஆகும்.

அந்த ஏழாவது நாளும் வந்தது. ராமானுஜர் எல்லா சிஷ்யர்களும், அன்பர்களும் நீர் மல்க தாங்கவொன்னா துயரத்தில் நின்றிருக்க சிஷ்யர்கள் திருமந்திரம், த்வயம், சரம ஸ்லோகங்களை ஓத அரங்கனை நினைத்தபடியே ராமானுஜர் பரமபத நாதனின் திருவடிகளை அடைந்தார்.

அவர் விருப்பப்படியே முதலியாண்டான் மகன் கந்தாடையாண்டான் கடைசி ஈமச்சடங்குகள் செய்ய நம்பெருமாள் வசந்த மண்டபத்தின் கீழே சம்ஸ்காரங்கள் செய்ய திருப்பள்ளி படுத்தினார்கள். ராமானுஜரும் வைகுண்டம் சென்றடைந்தார். மேலே வசந்த மண்டபத்தில் அவரது விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

வைஷ்ணவ சமயத்தில் புகழை உலகெங்கும் பரவச் செய்வதற்காகவே ஆதி சேஷன் அம்சமான பரமபத நாயகனால் அனுப்பட்ட ராமானுஜர் தன் கடமைகளை செவ்வனே நிறைவேற்றி பரமபத நாயகனை சென்றடைந்தார். ஒரு சிறந்த சதாப்தம் முடிவடைந்தது.

ராமானுஜர் 9 கிரந்தங்களை நமக்காக விட்டுச் சென்றுள்ளார். கீழே கொடுக்கப்ட்டுள்ள அந்த கிரந்தங்களை படித்தோ அல்லது ஸ்ரீவைஷ்ண மகான்கள் சொல்லக் கேட்டோ நாமும் பிறந்த பயனை அடைவோம். ராமானுஜர் எழுதிய நவரத்ன மாலை என்று அழைக்கப்பட்ட அந்த 9 நூல்களை கீழே கொடுத்துள்ளேன்;

1. ஸ்ரீ பாஷ்யம்
2. வைகுண்ட கத்யம்
3. ஸ்ரீரங்க கத்யம்
4. சரணாகதி கத்யம்
5. வேதார்த்த சங்ரஹா
6. வேதாந்த சாரா
7. வேதாந்த தீபா
8. கீதா பாஷ்யம்
9. நித்ய கிரந்தம்

ஸ்ரீராமானுஜர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்

சுபம்

## எம்பெருமானார் வாழித்திருநாமங்கள் / நாள்பாட்டு

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற் சாத்திய செந்துவராடைவாழி
ஏராரும் செய்யவடிவு எப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல்வாழி யிணைத்தோள்கள் வாழி
சோராத துய்யசெய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள் வாழி
ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி
இனிதிருப்போடு எழில் ஞானமுத்திரை வாழியே.

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே
மறையதனின் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறமிகு நற்பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாருமெதிராசர் அடியிணைகள் வாழியே.

சங்கரபாற்கர யாதவபாட்டப் பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலி யிங்கினி வீறுநமக்கிலை யென்று மிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே.

## கூரத்தாழ்வான் வாழித்திருநாமங்கள் / நாள்பாட்டு

சீராருந் திருப்பதிகள் சிறக்கவந்தோன் வாழியே
தென்னரங்கன் சீரருளைச் சேருமவன் வாழியே
பாராரு மெதிராசர் பதம்பணிந்தோன் வாழியே
பாடியத்தி னுட்பொருளைப் பகருமவன் வாழியே
நாராயணன் சமயம் நாட்டினான் வாழியே
நாலூரரான் தனக்கு முத்தி நல்கினான் வாழியே
ஏராருந் தையிலத்தத்து இங்குதித்தான் வாழியே
எழில்கூரத்தாழ்வான்தன் இணையடிகள் வாழியே.

பொருள் விரிக்கும் எதிராசன் பொன்னடியோன் வாழியே
பொன்வட்டில் தனை எறிந்த புகழுடையோன் வாழியே
மருள்விரிக்கும் முக்குறும்பை மாற்றவந்தோன் வாழியே
மயர்வறவே மெய்ஞ்ஞானம் விளக்கிடுவோன் வாழியே
இருள்விரிக்கும் சிவமிரட்டு எழுத்திட்டான் வாழியே
ஏதமற எவ்வுயிர்க்கும் இதமளித்தான் வாழியே
அருள்விரிக்கும் அரங்கர்தாள் அடியிணையோன் வாழியே
அழகாரும் கூரத்தாழ்வான்தன் இணையடிகள் வாழியே.

மட்டவிழும் பொழில்சூழ் குருகேசர் மறைப்பொருள்
வாழ்ந்திடு நாள்
மண்ணுலகில் சீபாடியம் விளங்கிட வந்து பிறந்தவர் நாள்
எட்டுமிரண்டும் இசைந்த சுலோகம் இசைத்திட வந்தவர் நாள்
இல்லை எனச் சிவமென்று எதிரிட்டு எழுத்திட வந்தவர் நாள்
துட்ட குதிட்டிகள் மாயிகள் வாழ்வை துணித்திட வந்தவர் நாள்
சூரியர் பூமியர் ஆரியர் என்று டுதித்திட வந்தவர் நாள்
அட்டதிசைக்கும் நிறைந்த பெரும்புகழ் (அந்தணர் வாழ்)
கூரத்தாழ்வான் வந்தருளிய நாள் தையில் விளங்கிடும் அத்தமது
நன்னாளே.



ஸ்ரீ ரங்கநாயகி தாயார் ஸ்ரீ ரங்கநாதர்

**ஸேர்த்தி உத்சவம்**

ஸ்ரீரங்கம்